"ராதா...பொன்னிறமாய்ப் பூக்குதே உன் அழகு,
என்றும் நீதானடி எனக்கு—
வாழ்வின் விளக்கு!"

## படியுங்கள் இதோ...ஃபேர் அண்ட் லவ்லி எப்படி ராதாவுக்கு கவனிக்கத் தக்க சிகப்பழகை அளித்துவிட்டது... இயற்கைக்கே உரிய இதமான வழியில்.

விளக்கேற்றி வணங்குகிறாள்
ராதா...நெஞ்சிலே நன்றிக் கீதம்—
பூரணமாய்த் தன் மீது பொன்மாரி
பொழிந்ததற்கு, மேனிமலர நன்றி...
நன்றி பொங்க வாழ்த்துகிறாள்
ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை.
எந்தப் பெண்ணும் கனவு காணும்
பொன்வண்ணம்—சிகப்பழகு,
அதனை மேனி மென்மையோடு
இயல்பாகப் பூக்க வைத்த க்ரீம்—
அதன் வண்ணஜாலமோ, துவக்கிய
இரண்டே மாதங்களில்!
நடந்ததை நம்பமுடியவில்லை,
இக்கணிலோ, ராதாவின்
காதுகளில் ராகமென ஒலிக்குது
ராஜா 'அவர்' கொஞ்சம் ரகசியப்
குழுரை: "பொன்னிறமாய்
பூக்குதே உன் அழகு...!"

ராதாவைப் போலவே
உங்களுக்கும், அந்த சிகப்பழகுக்
கனவு பலித்திட முடியும் - ஃபேர்
அண்ட் லவ்லி துணையோடு.

ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்

ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்

**ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...**
ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக
உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள
ஒப்பற்ற ஃபார்முலா—இரு முக்கிய
வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று:
சருமத்தின் அடியாழத்தில்



செயல்பட்டு, உடல் கறுக்கும் உள்வினையைத் தடுக்கிறது—வேறெந்த
க்ரீமுக்கும் இது இயலாத சாதனை.
மற்றொன்று: இதிலுள்ள இரட்டை
ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல் கறுக்க
வைக்கும் சூரிய ஒளியை உட்
புகாதபடி தடுத்து நிறம் காத்திடு
கிறது. ஆகவே, 6 முதல் 8
வாரங்களில் புதிதாக மேலெழும்பும்
கொழுந்துச் சருமப் படலங்களில்
செவ்வியான சாயல் மிளிரும்.
அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட்
லவ்லி—நாள் தவறாமல் உபயோகித்து
வந்தால், மென்மை கொஞ்சும்
இயல்பான சிகப்பழகு உறுதியாக
உமதாகிவிடும்.

**உபயோக முறை:**
கழுவிக் கொண்ட முகம், கழுத்து,
கரங்கள்மீது ஃபேர் அண்ட் லவ்லி
க்ரீமை பொட்டுப் பொட்டாக
இட்டபின், மேல் நோக்கித் தேய்க்க
வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட்
லவ்லி செயல்படத் துவங்கும் போது
சற்றே கூசும் உணர்வு ஏற்பட-
நேர்ந்தால் கவலை வேண்டாம்,
விரைவில் அது மறைந்துவிடும்.

**எளிதில் உள் உறிஞ்சப்படும்.**
குழைவு குணமோங்கி முன்னிலும்
மென்மையாக வருகிறது ஃபேர் அண்
லவ்லி, ஒரேசீராய் பரவுகிறது
சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப்
படுகிறது. உடலார உணருவீர் அந்த
மாறுதலை...பிறகு காண்பீர் கண்கூடாய்.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும்
கேட்டறிய விரும்பினீரானால் எழுதுங்கள்
இம் முகவரிக்கு: திருமதி கவிதா
குமார், ஃபேர் அண்ட் லவ்லி
அட்வைசர், பி.ஓ. பாக்ஸ் 758,
பம்பாய் 400 021.

**ஃபேர் அண்ட் லவ்லி**
**சிகப்பழகு க்ரீம்**

Fair & Lovely

Fair & Lovely

## ...ண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியில்.

TAS FAL 54 2517 TM

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு

**தமிழக அரசின் அரசியல் சினிமா தடைச் சட்டத்துக்கு அனுமதி வழங்காமல் சட்ட நிபுணர்களின் ஆலோசனையை ஆளுநர் கேட்டிருக்கும் போது, ''அவஸ்தே'' என்ற இந்தக் கன்னடப் படம் வெளிவருவது......**

# அ.தி.மு.க. அரசுக்கு அவஸ்தைதான்



● 'அவஸ்தே' படத்தில் கர்நாடக தகவல் துறை அமைச்சர் எம். பி. பிரகாஷ்.

கிருஷ்ணப்ப கௌடா சூதுவாது தெரியாத கிராமத்துப் பையன். இயற்கையில் புத்திசாலித்தனம் இருப்பதால், நகரத்திற்கு வந்து படிக்கும் வாய்ப்பு கிடைக்கும்போது கிருஷ்ணப்பா மிகவும் பிரகாசிக்கிறான். கல்லூரியில் படிக்கையில் கம்யூனிஸ்ட் தலைவர் அண்ணாஜியிடமும் கம்யூனிஸக் கொள்கைகளிலும் அவனுக்கு ஈடுபாடும் நெருக்கமும் உண்டாகிறது.

அரசியல் காரணங்களுக்காக அண்ணாஜி கைது செய்யப்பட்டு வாரங்கல்லில் சிறை வைக்கப் படுகிறார். காவலில் இருக்கும் போது அவர் இறந்து விடுகிறார். செய்தி அறிந்து வாரங்கல் வந்து சேரும் கிருஷ்ணப்ப கௌடாவும் சிறையில் அடைக்கப்படுகிறான்.

விடுதலை ஆன பிறகு, தனது அனுபவங்களால் மனம் நொந்த கிருஷ்ணப்பா, மீண்டும் கல்லூரிக்குப் போகாமல் தனது கிராமத்துக்குத் திரும்புகிறான். கிராமத்துப் பண்ணையார்களிடம் சிறு விவசாயிகள் படும் இன்னல்கள் கிருஷ்ணப்ப கௌடாவின் நியாய உணர்வைத் தூண்டிவிட, அவன் தலைமையில் பண்ணையார்களுக்கு எதிராக ஒரு பெரிய போராட்டம் வெடிக்கிறது. இந்தப் போராட்டம் மூலம் பிரபலமடையும் கிருஷ்ணப்பா அடுத்த தேர்தலின் போது சட்டமன்ற உறுப்பினராகிறான். மக்களுக்கு ஆத்மார்த்தமாக சேவை செய்து வருகிறான். ஆனால் அவன் திடீரென்று பாரிச வாயுவால் தாக்கப்பட்டுப் படுத்த படுக்கையாகும் போதுதான் பிரச்னைகள் முளைக்கின்றன:—

ஆளுங்கட்சியில் உட்பூசல்கள், கோஷ்டிப் பிரச்னைகள் தோன்றுகின்றன. முதலமைச்சரைப் பதவியிலிருந்து நீக்க ஒரு கோஷ்டி சதி செய்கிறது. இந்தச் சதியில் பகடைக் காயாக்கப்படுகிறான் கிருஷ்ணப்பா. படுத்த படுக்கையாயிருக்கும் அவன் மீது, முதலமைச்சருக்கு எதிராகச் சதி செய்து அப்பதவியைப் பிடிக்க முயல்வதாக அபாண்டமாகப் பழி சுமத்தப்படுகிறது. மனமுடைந்து போய் சட்ட மன்ற உறுப்பினர் பதவியிலிருந்து விலகிக் கொள்கிறான் கிருஷ்ணப்பா. மீண்டும் தன் சொந்த கிராமத்துக்கே திரும்புகிறான்.

'அவஸ்தே' திரைப்படம் கூறும் இக்கதை மூலம் பதவி வெறி பிடித்த சந்தர்ப்பவாத அரசியல்வாதிகள், நேர்மையான, நல்ல மனம் படைத்த சில அரசியல் வாதிகளுக்குக் கூட உலை வைத்துவிடுகிறார்கள் என்பது அப்பட்டமாகச் சொல்லப்பட்டுள்ளது.

திரைக்கதையை எழுதியவர் பிரபல கன்னட எழுத்தாளர் வி. ஆர். அனந்த மூர்த்தி. இவர் கோட்டயம் காந்தி பல்கலைக்கழகத்தின் துணைவேந்தரும் கூட.

அனந்தநாக் கதாநாயகனாக நடிக்கும் இப்படத்தின் மற்றொரு சிறப்பு — முதல் முறையாக இதில் சில கர்நாடக மாநில அமைச்சர்களும் சட்டமன்ற உறுப்பினர்களும் நடித்திருப்பதுதான்.

— பெந்தக்காளூரான்



"இனிமேல் எனக்கெதற்கு விளம்பரம்?"

# "ராஜீவ்ஜியும் ராஜ விசுவாசமும்"

## —வைஜயந்தி மாலா பேட்டி

கே: தமிழகத்தில் இ. காங்கிரஸ் பொலிவிழந்து, சுறுசுறுப்பே இல்லாமல் காணப்படுகின்றதே. பிரதமர் வருகையின் போது மட்டும்தான் தமிழகக் காங்கிரஸ் வட்டாரங்களில் சிறிது விழிப்பு ஏற்படுகிறது. இந்த நிலைமையைச் சரி செய்ய என்ன முயற்சிகள் எடுத்து வருகிறீர்கள்?

ப: நீங்கள் சொல்வது சரிதான். அதனால்தான் நான் அடிக்கடி சூறாவளிச் சுற்றுப் பயணங்களை மேற்கொண்டு எல்லா ஊர்களுக்கும் போய் வருகிறேன். இன்று இரவு கூட மதுரை, ராமநாதபுரம் மாவட்டங்களுக்குச் சுற்றுப்பயணம் புறப்படவிருக்கிறேன். பொதுக் கூட்டங்களுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

கே: தமிழக காங்கிரஸில் ஒற்றுமையில்லை. உட்பூசல்கள் காரணமாகத்தான் கட்சி சரியாகச் செயல்படாமல் இருக்கிறது என்ற குற்றச்சாட்டுக்கு உங்கள் பதில் என்ன? ஒற்றுமையைக் காக்கவோ, வளர்க்கவோ நீங்கள் என்ன செய்து வருகிறீர்கள்?

ப: ஒற்றுமையின்மை நிலவுவது உண்மை. இது ஒரு வருந்தத்தக்க நிலை. என்ன செய்வது? ஒற்றுமையை வளர்க்க நானும் என்னால் ஆன எல்லாவற்றையும் செய்து வருகிறேன். சுற்றுப்பயணங்கள் மேற்கொள்வதோடு எனது நற்பணி மன்றங்கள் மூலம் மக்களுக்குச் சேவைகள் செய்து வருகிறேன்.

கே: இச்செயல்களால் கட்சி ஒற்றுமை எப்படி வளரப் போகிறது?

ப: நாங்கள் எந்த வித்தியாசமும் பாராட்டாமல் எந்தப் பலனையும் எதிர்பார்க்காமல் மக்களுக்குச் சேவை செய்து வருவதால் அவர்களுக்கும் கட்சித் தொண்டர்களுக்கும் உண்மையான ஈடுபாட்டுடன் உழைப்பவர்கள் யார் என்பது புரியும்.

கே: உங்கள் பெயரில் புதிய மன்றங்கள் ஆரம்பிப்பதால் நீங்கள் பிறரிடமிருந்து உங்களைத் தனிமைப்படுத்திக் கொள்கிறீர்கள். ஏற்கெனவே இருந்த காங்கிரஸ் சார்புள்ள மன்றங்

கள் மூலமாக நற்பணிகள் செய்து நீங்கள் கட்சி ஒற்றுமையைக் காத்திருக்கலாமில்லையா?

ப: எனக்குத் தெரிந்த வரையில் காங்கிரஸ் சார்புள்ள நற்பணி மன்றங்கள் ஏதும் முன்னமே இருக்கவில்லை. நீங்கள் ரசிகர் மன்றங்களை மனத்தில் வைத்துக் கொண்டு இக்கேள்வியைக் கேட்கிறீர்கள். அந்த ரசிகர் மன்றங்கள் எனக்குத் தெரிந்த அளவில் சமுதாயப் பணியில் ஈடுபடுவதில்லை. மக்களுக்குச் சேவை செய்வதில்லை. எங்கள் மன்றங்கள் பொதுப்பணியில் ஈடுபட்டிருப்பதோடு, எனது கணவரின் பெயரில் நான் ஆரம்பித்துள்ள இலவச மருந்து வங்கி மூலமாகவும் ஏராளமான நபர்களுக்கு உதவி வருறோம். மருந்து வாங்க வசதி இல்லாதவர்களுக்கு இலவசமாக அவற்றை வழங்குகிறோம். இந்தியாவில் கிடைக்காத சில மருந்துகளை அயல்நாடுகளிலிருந்து வரவழைத்து வைத்துக் கொள்கிறோம். அவை சில நோயாளிகளுக்கு அவசரமாகத் தேவைப்படும் போது எங்களை அணுகி, காத்திருக்காமல் உடனே பெற்றுக் கொள்கிறார்கள். பல உயிர்கள் காப்பாற்றப்படுகின்றன. இந்த அமைப்பின் மூலம் இன்னும் நிறைய செய்ய வேண்டும் என்பதே என் நோக்கம். என் கணவர் மிகவும் நோய்வாய்ப்பட்டிருந்த போது சில மருந்துகள் 'அவசரமாகத் தேவைப்பட்டன. அவை இந்தியாவில் கிடைக்காததால் மிகவும் கஷ்டப்பட்டு வெளி நாட்டிலிருந்து வரவழைக்க வேண்டியிருந்தது. அப்போது நான் பட்ட சிரமமும் வேதனையும் தான் இத்தகைய மருந்து வங்கி ஒன்றை ஆரம்பிக்க வேண்டும் என்ற எண்ணத்தை என்னுள் ஏற்படுத்தியது.

கே: பாலி ஃபவுண்டேஷன் என்ற அமைப்பின் கீழ் நடத்தப்படும் இந்தச் சேவையை நாங்கள் மனதாரப் பாராட்டுகிறோம். ஆனால் அதே சமயத்தில் அது உங்கள் சொந்த முயற்சி என்பதால் உங்களுக்குத் தனிப்பட்ட முறையில் பெருமையே தவிர கட்சிக்கு அதில் என்ன பங்கு?

ப: கட்சியும் நானும் ஒன்றுதான். எங்களை இனி பிரிக்கமுடியாது. அப்படியிருக்கையில் எனது தனிப்பட்ட சாதனையாக நான் எதையும் சொல்லிக் கொள்ள விரும்பவில்லை.

**"என் சினிமா பிரபையை நல்ல முறையில் பயன்படுத்திக் கொள்வதில் என்ன தவறு இருக்கு?"**

கே: தமிழ்நாட்டைச் சேர்ந்த மூத்த தலைவர்கள் பலர் இருக்கும் போது அவர்களையெல்லாம் ஒதுக்கிவிட்டுப் புதிய உறுப்பினரான உங்களுக்குத்தான் தேர்தலில் நிற்க வாய்ப்பு அளித்தது கட்சி மேலிடம். இது பலருக்கு அதிருப்தி அளித்திருக்கும். இது குறித்து உங்கள் கருத்து என்ன?

ப: வகுப்பில் முதல் ராங்க் வாங்கும் மாணவனிடம் 'நீ ஏன் முதல் ராங்க் வாங்கினாய்?' என்று கடிந்து கொள்ள முடியுமா? என் ஈடுபாட்டையும் திறமையையும் மதித்து எனக்கு வாய்ப்பு அளிக்கப்பட்டது. எனக்குப் பதவி வேண்டும் என்று நான் கேட்கவில்லை. ஆனால் என் வளர்ச்சி சிலருக்குப் பொறுக்கவில்லை. அவர்கள் காங்கிரஸை நல்ல முறையில் வளரச் செய்திருந்தால் என் போன்றவர்கள் வந்து சேர வேண்டிய அவசியமே இருந்திராது. நான் காங்கிரஸில் சேரப்போகிறேன் என்று சொன்ன போது எனக்கு மிகவும் வேண்டிய ஒருவர் எச்சரித்தார் — 'காங்கிரஸின் எதிராளிகளிடமிருந்து உனக்கு அபாயம் ஏதும் இருக்காது; காங்கிரஸுக்குள்ளேயே இருக்கும் எதிரிகளிடம்தான் நீ எச்சரிக்கையாக நடந்து கொள்ள வேண்டும்!' என்றார்.

கே: சினிமா மூலம் பிரபலமடைந்த நீங்கள் அந்தப் பிரபை காரணமாகத் தேர்தலில் வெற்றி பெறுவது என்பது தார்மீக ரீதியில் சரியாகுமா? நம் நாட்டு வாக்காளர்களுள் பெரும்பகுதியினர் கல்வியறிவு இல்லாத ஏழைகள். அவர்களுக்குச் சினிமாதான் வாழ்க்கை; வாழ்க்கைதான் சினிமா. அத்தகைய எளியவர்களை உங்களைப் போன்றோர் ஏமாற்றியதாகாதா?

ப: என் சினிமா பிரபையை நான் நல்ல முறையில் பயன்படுத்திக் கொண்டு அதன் மூலம் மக்களுக்குச் சேவை செய்ய முடிந்தால் அதில் என்ன தவறு? என் சுயலாபத்துக்காக நான் அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லையே! மேலும் தேர்தல் பிரசாரத்தின்போது நான் என் சினிமாப் பாட்டுக்களையோ பிரபையையோ விளம்பரப்படுத்தி வோட்டுக் கேட்கவில்லை. நான் கைச்சின்னத்துக்குத்தான் ஆதரவு கேட்டேன் — கட்சியின் பிரதிநிதியாகத்தான் தேர்தலில் நின்றேன். எனக்கு எதிராகப் போட்டி





விட்டவர்கள்தான் நான் சினிமாவுலகைச் சேர்ந்தவள் என்றும் எனக்கு அரசியல் தெரியாது என்றும் எனக்கு எதிராகப் பேசி வந்தனர். ஒரு வகையில் அவர்கள் சொன்னது உண்மைதான். நான் முதலில் ஒரு கலைஞர்—உணர்வுபூர்வமாகச் சிந்திப்பேன். உள்ளத்திலிருந்து பேசுவேன். அதனால் வெறும் வார்த்தைகளோ, ஆடம்பரப் பேச்சோ என்னிடமிருந்து வராது. அந்தப் படாடோபமில்லாமல் இருப்பதால் மற்ற 'அரசியல்வாதிகளைப்' போல் என்னால் இருக்க முடியாது.

கே: நீங்கள் பிரதமர் குடும்பத்துக்கு நெருங்கியவர். அதனால் உங்கள் அரசியல் பிரவேசம் எளிதாக்கப்பட்டதா?

ப: பண்டிட்ஜி காலத்திலிருந்து எங்களுக்கும் பிரதமர் குடும்பத்துக்கும் தொடர்பு உண்டு. இந்திராஜியிடம் நெருக்கமான சிநேகம். ஜனதா ஆட்சியின் போது அவருக்கு ஏற்பட்ட இன்னல்கள் என்னையும் என் கணவரையும் மிகவும் பாதித்தன. 'இவ்வளவு பெரிய உயர்ந்த தலைவிக்கு இப்படி ஒரு நிலைமை வந்துவிட்டதே' என்று வருந்தினோம். அவரை அடிக்கடி சந்தித்தோம். பின்னர் மக்களே ஜனதாவைத் தூக்கியெறிந்துவிட்டு இந்திராஜியை மீண்டும் ஏற்றுக் கொண்டனர். அப்போதுதான் என் கணவரும் நானும் காங்கிரஸில் சேர்ந்து அதன் சாதனைகளைப் பட்டி தொட்டியெல்லாம் பரப்ப, இந்திராஜியிடம் அனுமதி கேட்டோம். அவரும் புன்னகையுடன் சம்மதித்தார். 1981 க்குப் பிறகு இரண்டரை வருடங்கள் நாங்கள் தமிழகத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் காங்கிரஸ் சார்பாகப் பொதுக் கூட்டங்கள் நடத்தினோம். அப்போதுதான் தமிழக மக்கள் காங்கிரஸை மெள்ள மறந்து வருகிறார்கள் என்பதை உணர்ந்தோம். ஆனால் இப்பழம்பெரும் கட்சியின் வேர்கள் இன்னும் உயிரோட்டத்துடன் இருந்தன. அதை மறுபுடியும் மக்களுக்கு நினைவுபடுத்தித் துளிர்க்கச் செய்தோம். இவ்வளவெல்லாம் நான் செய்தது

**"காங்கிரஸுக்குள்ளேயே இருக்கும் எதிரிகளிடம்தான் எச்சரிக்கையாக நடந்துகொள்ள வேண்டும்!"**

எந்தப் பதவியையும் எதிர்பார்த்து அல்ல. பொதுத் தேர்தலுக்கு முன் ராஜிவ்ஜி சென்னை வந்திருந்தபோது ராஜ்பவனில் என்னை அழைத்து, 'நீ தேர்தலில் நிற்கிறாயா?' என்று கேட்டார். நான் அதைச் சற்றும் எதிர்பார்க்கவில்லை. தங்கள் விருப்பப்படி செய்கிறேன் என்று சொல்லிவிட்டேன். அதற்குப் பிறகு மக்கள் வழங்கிய தீர்ப்பு உங்களுக்குத் தெரியும்.

கே: உங்கள் தொகுதிக்காக என்ன செய்திருக்கிறீர்கள்?

ப: எனது தொகுதி மக்களின் பிரச்னைகளைத் தீர்ப்பதற்குச் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் அல்லது அமைச்சகங்களிடம் பேசி உடனடி நடவடிக்கை எடுக்கச் செய்கிறேன். அரசாங்க நிர்வாகத்தின் 'சிவப்பு நாடா' தாமதங்களைக் குறைக்க உதவுகிறேன். எனது மன்றங்கள் மூலம் அந்த நடவடிக்கைகள் எடுக்கப்படுகின்றனவா என்று கண்காணிக்கிறேன்.

கே: சென்னைக் கடற்கரையில் மீனவப்படகுகள் 'ஆக்கிரமிப்பு' என்று கருதி நீக்கப்பட்டபோது எழுந்த வன்முறைப் பிரச்னை நினைவிருக்கும். அதற்குப் பிறகு நீங்கள் அந்த மீனவர்களைப் பார்க்கப் போன போது உங்களுக்கு நல்ல முறையில் வரவேற்பு இடைக்கவில்லையே? ஏன்?

ப: அதெல்லாம் எதிர்க் கட்சிக்காரர்கள் செய்த குழப்பம். அதே மீனவர்கள் சமீபத்தில் தங்கள் பிரச்னை ஒன்றைத் தீர்க்கும்படி என்னைத்தான் அணுகிக் கேட்டார்கள். ராயபுரம் கடற்கரைப் பகுதியில் மணல் சேர்ந்து போய்ப் படகுகள் போக்குவரத்துத் தடைப்பட்டபோது மணல் திட்டுகளை அகற்றிச் சீர் செய்ய நான்தான் முயற்சிகள் எடுத்தேன்.

எந்தச் சுயநல நோக்குமின்றித்தான் நான் காங்கிரஸில் சேர்ந்தது முதலே செயல்பட்டு வருகிறேன். பதவியும் பொறுப்பும் என்னைத் தேடி வந்தால் அதற்கு நான் என்ன

செய்ய முடியும்.

கே: பிரதமர் குடும்பத்துடன் உங்களுக்கு உள்ள நெருக்கத்தைப் பயன்படுத்திக் கொண்டு தமிழ்நாட்டின் நியாயமான பிரச்னைகளை எடுத்துச் சொல்லி உடனடித் தீர்வுக்கு நீங்கள் உதவலாம் அல்லவா? காவிரி நதிநீர்ப் பங்கீடு, தெலுங்கு கங்கை போன்ற திட்டங்களில் முன்னேற்றமே இல்லையே?

ப: தனிப்பட்ட முறையில் எனக்குள்ள தொடர்பைப் பயன்படுத்திக் கொண்டு எல்லா விஷயங்களுக்கும் மேலிடத்துக்கு

## "ஒரே தலைவர் ராஜீவ்ஜீதான்!"

ஓடிக் கொண்டிருக்க முடியாது. நியாயமான பிரச்னைகளை எடுத்துச் சொல்ல வேண்டிய இடத்தில் சொல்லிக் கொண்டுதான் இருக்கிறேன். தண்ணீர்ப் பிரச்னைக்கு ஒரு நிரந்தரத் தீர்வு காண வேண்டும் என்றும் சென்னை நகர துரித ரயில் போக்குவரத்துத் திட்டத்தை நிறைவேற்ற வேண்டும் என்றும் வலியுறுத்திக் கொண்டுதான் இருக்கிறேன்.

கே: ஃபிலிம் பைனான்ஸ் கார்ப்பரேஷன் மூலம் இறக்குமதி செய்யப்படும் திரைப்படங்கள் ஆபாசமாக இருக்கின்றன என்று கூறியுள்ளீர்கள். நீங்களே ஒரு காலத்தில் துணிச்சலான வேடங்களில் திரைப்படங்களில் நடித்தவர்தானே? அப்போதைய கால கட்டத்தில் உங்கள் வேடங்கள் கவர்ச்சி வேடங்களாகக் கருதப்பட்டுள்ளனவே?

ப: இருக்கலாம். ஆனால் இந்த அளவு ஆபாசமோ வன்முறையோ அந்தக் காலத்துப் படங்களில் கிடையாது. இன்றைய படங்கள் வன்முறையை அப்பட்டமாகக் கற்றுத் தருகின்றன. வாழ்க்கையிலும் வன்முறை அதிகரித்து வருகிறது.

கே: நீங்கள் அதிகமாக விளம்பரம் நாடுபவர்; முன்னணியில் இருக்க விரும்புபவர் என்ற குற்றச்சாட்டு இருக்கிறதே?

ப: ஏற்கெனவே சொல்லிவிட்டேன். எந்த எதிர்பார்ப்புடனும் நான் அரசியலில் நுழையவில்லை. எனக்குப் பெயரும் புகழும் விளம்பரமும் இனிமேல் அவசியமில்லை. சில பேரைப் போல் நான் பிரதமர் தமிழகம் வரும்போது அவருடன் வந்துவிட்டு அவருடனேயே திரும்பிச் செல்வதில்லை. முன்னதாகவே வந்துவிடுகிறேன். என் தொகுதிப் பணிகளைக் கவனிக்கிறேன்.

கே: நீங்கள் தில்லி சென்று சென்னை திரும்பினால்கூட விமான நிலையத்தில் கோஷம் போடத் தொண்டர் கூட்டம் கூடி விடுகிறது. இதெல்லாம் அவசியமில்லாத ஆர்ப்பாட்டம்தானே?

ப: எனக்கு ரசிகர்கள் இருக்கிறார்கள்; அவர்கள் வருகிறார்கள். அவர்களை நான் எப்படித் தடுப்பது?



கே: குறுகிய காலத்தில் அரசியலில் நிறைய முன்னேறி விட்டீர்கள். திடீரென்று எம். பி. பதவிக்குப் போட்டியிட இடம் கிடைத்தது போல் திடீரென்று தமிழக காங்கிரஸ் தலைமைப் பொறுப்பு உங்களுக்கு அளிக்கப்பட்டால்?

ப: அப்படி ஒரு கௌரவம் எனக்குக் கிடைத்தால் காங்கிரஸின் மேம்பாட்டுக்கும் ஒற்றுமைக்கும் நிச்சயம் உழைப்பேன்.

கே: ஃபேர்ஃபாக்ஸ், போஃபோர்ஸ் விவகாரங்கள் காரணமாக ராஜீவ் காந்தியின் இமேஜும் காங்கிரஸின் இமேஜும் இறங்கு முகத்தில் உள்ளன. அதை நிவர்த்தி செய்ய ஏதேனும் செய்து வருகிறீர்களா?

ப: இந்தவிவகாரங்கள் எல்லாம் அவருக்கு வேண்டாதவர்கள் வேண்டுமென்றே கிளப்பி விட்டுப் பெரிதுபடுத்தியுள்ளவை. இது ஒரு கால கட்டத்துக்குத்தான் நிலைக்கும். இறுதியில் உண்மை நிலைநாட்டப்படும். எது எப்படியானாலும் காங்கிரஸின் ஒரே தலைவர் ராஜீவ்ஜீ தான். அவரிடம் எனக்கு ராஜ விசுவாசம் (supreme loyalty) உண்டு. அது என்றைக்கும் மாறாது.

— நமது நிருபர்கள்

மேலட்டை வண்ணப்படம், புகைப்படங்கள்:

**கே. வி. ஆனந்த்**









வட்ட மேஜை

# செயற்கரிய சாதனைகள்தான்!

• எங்கள் அரசு சாதாரண சாதனைகளையல்ல 'செயற்கரிய சாதனை'களைச் சாதிக்கவே கங்கணம் கட்டிக் கொண்டிருக்கிறது. ஆம்... கு. க. வுக்குப் பின்னும் குழந்தைகள் பிறத்தல், கட்டடமே இல்லாத பள்ளிகளில் பிள்ளைகள் படித்தல், பள்ளிகளில் ஆண்டுக்காண்டு தேர்ச்சி சதவீதத்தைக் குறைத்தல், கட்டிமுடிக்கப்பட்ட கூடங்கள், பேருந்து நிலையங்களைத் திறக்காதிருத்தல், தஞ்சையில் தண்ணீர் இல்லாமலேயே ('மானாவாரி') விவசாயம் தொடங்குதல் இப்படி... செயற்கரிய சாதனைகளின் எண்ணிக்கை ஏறிக் கொண்டே போகிறது. மக்களின் வேதனைப் பொழுது தான் விடியவே மறுக்கிறது.

திருக்குவளை கவிஞர். வெற்றிப்பேரொளி.

• கு. க. திட்டத்தில் குளறுபடிகள் அட்டைப் படக் கட்டுரை படித்தேன். ஓர் அற்புதமான திட்டத்தை அதிகாரிகள் தங்கள் சுயநல நோக்கத்திற்காகப் பாழாக்கிக் கொண்டிருக்கிறார்கள் என்பதையும், கு. க. திட்டம் என்றாலே ஏழை மக்களை முகம் சுளிக்க வைத்து விட்டார்கள் என்பதையும் அறிந்தபோது வெறுப்பாகவும் வேதனையாகவும் இருந்தது.

அரூர். மு. மதிவாணன்.

• குடும்பக் கட்டுப்பாட்டின் நன்மைகளுக்கே பத்திரிகைகள் முக்கியத்துவம் கொடுத்து மிகப் பெரியதாகச் செய்திகளை வெளியிட்டு வருகின்றன. ஆனால் ''கல்கி'' தனது சமுதாயப் பணியில் அத்திட்டத்தினால் விளையும் தீமைகளைத் துல்லியமாக ஆராய்ந்து வெளியிட்டு, எளிய பாமர மக்களுக்கு நடைபெறும் அநியாயங்களையும், அக்கிரமங்களையும், குளறுபடிகளையும் அம்பலப்படுத்தியுள்ளது.

சீர்காழி. ஆர். சாந்தகுமாரி.

• 27.9.87 இதழில் தேர்வு செய்யப்பட்டு வெளியான அனைத்து ஜோக்குகளுமே ரசித்துச் சிரிக்கும் வண்ணம் அமைந்திருந்தன.

சென்னை — 15. இரா. சி. இரஞ்சன்.

• ''மண்ணோடு மனங்கள்'' கதை உணர்வு பூர்வமாக இருந்தது. எங்கள் மனத்தை அதோடு ஒன்றிடச் செய்த இனியவனுக்குப் பாராட்டுக்கள்.

திருக்கடையூர். — ஜி. கே. ராஜா

• நிர்வாகத்தில் என்னென்ன குறைகள் உள்ளன என்பதை அறிய, முதலாளி மாறு வேடத்தில் செல்லும் சிறுகதைக் கரு வழக்கமானதுதான்! இருந்தாலும் வித்தியாசமான நடையில், விறுவிறுப்பு கலந்து அதற்கு மெருகு பூசி விட்டார் 'திருச்செந்தூர் இன்று: பாபநாசம் நாளை' — சிறுகதை ஆசிரியர்!

குத்தாலம். எஸ். ராஜா.

• சுற்றிப் பார்த்தோம் சொல்கிறோம், கட்டுரையின் பக்கங்களைச் செங்கை மாவட்ட கலெக்டரின் பார்வைக்கு அனுப்புங்கள். அப்பொழுதாவது மாவட்டத்தின் குறைகளைக் கலெக்டர் தெரிந்து கொள்ளட்டும்.

திருநெல்லிக்காவல். எஸ். அரிஅரன்.

• ஒரு நாட்டின் பொருளாதார நிலைமையையே நிர்ணயிக்கும் மக்கட் தொகை சம்பந்தப்பட்ட குடும்பக் கட்டுப்பாட்டைப் பற்றிக் கேட்டதற்கு 'நீங்களா இப்படிப்பட்ட கேள்விகளைக் கேட்பது?' என்று ஒரு மாவட்டத்தின் கலெக்டர் பதில் கூறுவார் என்று நானும் எதிர்பார்க்கவில்லை சார்!

மயிலாடுதுறை. கி. எழில்.

• இந்தவாரத் தலையங்கத்தில் அறிவாலயம் அமைத்தவருக்கும், அ. தி. மு. க. கொ. ப. செ. க்கும், தமிழக அரசின் முதல்வருக்கும் நீங்கள் கூறியிருக்கும் அறிவுரைகள் சத்திதம்!

சூளை. சி. துரைராஜ்.

• தலையங்கம் கண்டேன். நல்ல விஷயத்திற்காகக் கை தட்டிய அதே நேரத்தில், கண்டிக்க வேண்டியதற்காகத் தலையில் தட்டிய நடு நிலைமை பிரமாதம். இதுதான் நடு நிலைமை.

திருச்சி — 8. மின்னல்ராஜன்.

• போஃபர்ஸ் நிறுவன மேனேஜிங் டைரக்டர் இந்தியா வந்திருக்கிறாரே என்ற கேள்விக்குத் தராசு கூறிய பதிலை மெய்ப்பிப்பது போல் இங்கும் நாடகம் அரங்கேறியுள்ளது. எனவே இதனைக் கூறிய தராசுக்கு முன்யோசனை கொஞ்சம் அதிகம்தான் என்பதை ஒப்புக்கொள்ள வைக்கிறது.

கார்மாங்குடி. குரு. வைத்தியநாதன்.

• எழுத்தாளர் சாண்டில்யனுக்கு அஞ்சலி செலுத்தும் வகையில், ''சாண்டில்யனுடன் ஒரு சண்டை'' கட்டுரை மிகச் சிறப்பாக அமைந்திருந்தது. அவரிடமிருந்த பண்பையும் எழுத்தாற்றலையும் மிக அருமையாக இக்கட்டுரை வெளிப் படுத்திக் காட்டியசு

கடலூர். மு. உலகாண்ட......

• சாண்டில்யன் சிறந்த படைப்பாளர் மட்டுமல்ல சிறந்த பண்பாளரும்கூட என்பதை அறிந்து கொண்டேன். அவர் உயிருடன் இருக்கும் போதே அவருக்கும் பரிசு வழங்கித் தன்னைக் கௌரவப்படுத்திக் கொள்ளத்தவறிவிட்டது தமிழக அரசு! அவருடைய அற்புதப் படைப்பான 'யவனராணி' இன்னும் மனக் கண் முன்னேயே நிற்கிறது. அவருடைய பாத்திரங்கள் எல்லாமே ஒரு சரித்திரம் அல்லவா? அவருக்கு என் கண்ணீர் அஞ்சலி.

அம்பகரத்தூர். க. அன்பழகன்.

• வம்பு மார்க்கெட்டில் பல சரக்குகள் நன்றாகத்தான் இருக்கின்றன. பக்கத்து மாநிலச் சரக்குகளும், டெல்லிச் சரக்குகளும் ஒன்றிரண்டு வந்தால் மேலும் சிறப்பாயிருக்கும்!

சென்னை — 39. சி. தெ. இளமுருகன்.



# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி-ஃபாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மற்றும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| **3** மாதம் | 5.2 | 59.1 | 4.9 | 58.4 |
| **6** மாதம் | 6.7 | 64.7 | 6.1 | 63.7 |
| **9** மாதம் | 7.3 | 68.2 | 6.9 | 67.0 |
| **12** மாதம் | 8.4 | 73.9 | 7.8 | 72.5 |

*இது இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது.
இது இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.

வண்ணமய பாப்பா— பராமரிப்பு வழிகாட்டி இலவசமாய் பெற்றிட இதை அனுப்புங்கள் இங்கே: க்ளின்டியா லிமிடெட் (FPD/51) டாக்டர் அன்னி பெஸன்ட் ரோட், ஓர்லி, பம்பாய்-400 025.




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த ஃபாரெக்ஸ் அளியுங்கள்.

**ஃபாரெக்ஸ்®**

**சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி**

# தீபாவளி வாழ்த்துக்கள்



- தேவேந்திர சேலைகள்
- கோயமுத்தூர் கோரா சேலைகள்
- பரமகுடி புட்டா சேலைகள்
- கோடம்பாக்கம் சேலைகள்
- உறையூர் சேலைகள்
- செட்டிநாடு சேலைகள்
- ஓர நாட்டுச் சேலைகள்
- மற்றும் பலவிதமான பட்டு மற்றும் பருத்திச் சேலைகள்

## கோ-ஆப்டெக்ஸ்
கைத்தறி

**20-40%**
பண்டிகைக்கால
சிறப்புத் தள்ளுபடி

# நம்பியவரை நட்டாற்றில் விட்ட நடிகர் சங்கம்!



* ராதாரவி



* சந்திரமௌலி

"என் முதல் பெண்ணுக்குக் கல்யாணம்" என்று பெருமையுடன் தமது ஜகோர்ட் நண்பர்களிடம் சொல்லிக் கொண்டார் வக்கீல் சந்திரமௌலி.

"எப்போது? எங்கே?" என்று ஆவலாக விசாரித்தார்கள் நண்பர்கள்.

"இன்னும் ஒரு மாதம் இருக்கு. ஆகஸ்ட் இருபத்தாறும் தேதி. நடிகர் சங்கம் சங்கரதாஸ் அரங்கத்தில்..."

"என்னது நடிகர் சங்க மண்டபத்திலா...?" என்று சில நண்பர்கள் இழுத்தபோது...

"ஏன்... என்ன விஷயம்?" என்றார் சந்திரமௌலி அவசரமாக.

"அந்த மண்டபத்தில் ஒரே தேதிக்கு இரண்டு மூன்று பேர்கிட்ட முன்பணம் வாங்கிக்கறதாகக் கேள்வி...!"

"சே... சே... அப்படி இருக்காது. ஒரு கல்யாணம் நடத்தத்தான் மண்டபம் இருக்கு. மூன்று நாட்களுக்கு எட்டாயிரம் ரூபாய் வாடகை கொடுத்துள்ளேன்."

நண்பர்களுக்கு ஏதோ பதில் சொல்லிவிட்டாரே தவிர சந்திரமௌலிக்கு லேசான பயம் வயிற்றைக் கவ்வ ஆரம்பித்தது. அவரும் அவரது உதவியாளர்களும் அடிக்கொரு தடவை நடிகர் சங்கத்துக்கு விஜயம் செய்து தாங்கள் கல்யாணம் வைத்திருக்கும் அதே தேதியில் வேறு கல்யாணத்துக்கும் அம்மண்டபம் வாடகைக்கு விடப்பட்டுள்ளதா என்று விசாரித்து வந்தனர்.

இதைப் பார்த்த நடிகர் சங்க மானேஜர் கூட, "என்ன ஸார்... ரொம்ப பயப்படறீங்க? பழைய மானேஜ்மெண்ட்லகொஞ்சம் தில்லுமுல்லு நடந்தது உண்மைதான். இப்போ நாங்க ரொம்ப நாணயமா, ரொம்ப கண்டிப்பா இருக்கோம்" என்று நம்பிக்கை கொடுத்து வந்தார்.

கல்யாணத்துக்கு இரண்டு நாட்கள் முன்பு — நடிகர் சங்க அரங்கத்தினுள் நுழைந்தார் சந்திரமௌலியின் உதவியாளர் ரமேஷ். நாதஸ்வர இசை அரங்கில் முழங்கியது. ரமேஷுக்கு லேசான சந்தேகம். விசாரித்ததில் ஆகஸ்ட் இருபத்தாறும் தேதி அதே இடத்தில் வேறு கல்யாணம் நடக்க இருப்பதும், அதற்கான பந்தக்கால் முகூர்த்தம்தான் அப்போது நடந்து முடிந்து கொண்டிருந்தது என்றும் தெரிய வந்தது. 'ஐயோ மோசம் போய் விட்டோமே' என்ற கவலையில் ரமேஷ் ஸீனியருக்கு போன் செய்து விஷயத்தைக் கூற, அதிர்ந்து போய் ஓடி வந்தார் சந்திரமௌலி.

இருவரும் நேராக மானேஜரைத் தேடி ஓடினால் ஆளைக் காணோம்! அவரைத் தேடி மண்டபத்தைச் சுற்றி வந்தபோது, அதிர்ச்சிக்கு மேல் அதிர்ச்சி! கார் பார்க்கிங் இடத்தைத் திமர்ச் சத்திரமாக மாற்றுவதற்கு வேண்டிய அத்தனை ஏற்பாடுகளும் நடந்து கொண்டிருந்தன! இரண்டு ஜோடி வாழை மரம், ஷாமியானா, தண்ணீர் வசதிக்குத் தற்காலிக பைப் லைன், என்று மற்றொரு கல்யாணம் நடத்துவதற்கு வேண்டிய வசதிகளையெல்லாம் கார் பார்க்கில் செய்து கொண்டிருந்தார்கள். மண்டபத்தில் இருந்த ஆட்கள் அலட்சியமாக அளித்த பதில்கள் வயிற்றெரிச்சலைக் கிளப்பின. 'நண்பர்கள் சொன்னபடியே ஆகிவிட்டதே' என்று நொந்து கொண்டு, சங்க நிர்வாகிகளான பிரபல நடிகர்களை வரவழைத்து, சங்கம் கொடுத்த ரசீதைக் காட்டி, சங்கத்தின் தில்லுமுல்லைப் பற்றிச் சொல்லித் தீர்த்தார் சந்திரமௌலி. போட்டியாக

வந்திருந்த திருமணக் கோஷ்டியிடம் முறையான ரசீது இல்லை. ஆனால் அவர்கள் சினிமாத் துறையைச் சேர்ந்தவர்கள். கடைசியில் அவர்களுக்குத் தான்தான் விட்டுக் கொடுக்க வேண்டி வரும் என்று சந்திர மௌலிக்குத் தோன்றியதால் பிடிவாதமாக வாதாடினார். ஆனால் அவர் நினைத்ததற்கு மாறாக, அந்தக் கோஷ்டியின் மாப்பிள்ளையே வந்து "ஸார்... நீங்க கேன்ஸல் செய்திட்டதாகச் சொல்லித்தான் எங்களிடம் பணம் வாங்கினாங்க. அதை நானும் நம்பி, காட்பாடியில் நடக்க இருந்த கல்யாணத்தை இங்கே வைச்சுக்கச் சம்மதித்தேன். மேடையையெல்லாம் ஜோடிச்சு, லைட் மியூஸிக்குக்கு வேண்டிய ஏற்பாடெல்லாம் செய்து வைச்சுட்டேன், ஸார்" என்று தழுதழுத்த குரலில் கூறினார்.

**வா**க்கு வாதம் நள்ளிரவு வரை நீண்டது. கடைசியில் சந்திரமௌலியின் பெண் கல்யாணத்துக்குக் கார் பார்க்கிங் இடமும், சாப்பிடுவதற்கு முறையான டைனிங் ஹாலும் வைத்துக் கொள்வது என்றும், மற்றொரு கல்யாணத்துக்கு மண்டபமும், தாற்காலிக டைனிங் ஹாலும் வைத்துக் கொள்வது என்றும் முடிவாகியது. ஒரு வழியாகத் தங்கள் பிரச்னைகளைத் தாங்களே தீர்த்துக் கொண்டு, இரு தரப்பினரும் கல்யாணங்களை முடித்துக் கொண்டனர்.

**அ**து சரி; அவசரமாக வரவழைக்கப்பட்ட நடிகர் சங்க நிர்வாகிகளின் பங்கு என்ன? அவர்கள் பதற்றமோ கவலையோ காட்டவில்லை. எப்படியும் நிச்சயித்த இடத்தில், கல்யாணத்தை நடத்தியாக வேண்டிய கட்டாயத்தில், பாதிக்கப்பட்டவர்களே இப்படித் தமக்குள் சமரசம் செய்து கொள்வார்கள் என்ற இடமான நம்பிக்கையில் (அனுபவ அறிவோ?) 'நாம் ஏன் தலையிட வேண்டும்?' என்று இருந்து விட்டனர். இந்த மெத்தனம் அவர்கள் பொறுப்பின்மையைத்தான் காட்டியது.

கல்யாணத்துக்கு இரண்டு நாட்களுக்குப் பிறகு, சந்திரமௌலியைச் சந்தித்தோம். "சங்க நிர்வாகிகள் பொறுப்புடன் நடந்து கொள்வார்கள் என்று எதிர்பார்த்தேன். ஏமாற்றம்... ஆயிரக்கணக்கில் கொட்டிக் கல்யாணம் செய்யும் அந்தச் சமயத்தில் ஏற்பட்ட கவலையும், பிரச்னையும் மனத்தில் வடுவாகி விட்டன" என்றார்.

**இ**ந்த விஷயத்தைப் பற்றி நடிகர் சங்கத் தலைவர் ராதா ரவியைக் கேட்டோம். அவர் கூறினார்:

"நடந்த சம்பவங்களுக்காக நான் மிகவும் வருந்துகிறேன். நடிகர் சங்கத்தின் நிர்வாகப் பொறுப்பில் உள்ள நடிகர்களுக்கு அன்றாட அலுவல்களைக் கவனிக்க நேரம் இராது. எனவே, இதற்காக நியமிக்கப்படுகிறவர்கள் யோக்கியப் பொறுப்புடன் நடந்து கொள்ளாத போது நிர்வாகப் பொறுப்பில் உள்ள என் போன்ற நடிகர்களின் நற்பெயரும் பாதிக்கப்படுகிறது. ஆகஸ்ட் இருபத்தாறும் தேதி நடக்க வேண்டிய கல்யாணம் சந்திரமௌலி வீட்டுக் கல்யாணம் தான். மற்றொரு கல்யாண கோஷ்டி ஒரு சினிமா தயாரிப்பாளருக்கு வேண்டியவர்கள். அவர்கள் ஏழாயிரம் ரூபாய் பணத்தைக் கொடுத்து விட்டதாகச் சொன்னார்கள். ஆனால் ரசீது எதுவும் இல்லை. பொதுவாகவே நடிகர் சங்கக் கணக்கு வழக்குகள் சரியில்லை. நான் தலைவரான பிறகு சரி செய்யலாம் என்று பார்த்தால்... இது போல் பல தகராறுகள். இனிமேல் இதுபோல நடக்கக் கூடாது என்பதில் நான் உறுதியாக இருக்கிறேன்."

— ப்ரியன்; லட்சுமி

---

"நான் போட்டிருக்கிற பேண்ட் — சட்டை வேணுமா, ஏன்யா?"

"இதுக்கும் சேர்த்து அம்மா, வீட்லேபாத்திரம்வாங்கிக்கிட்டாங்களே...!"

— ஆர். வசந்தகுமார்.





"ஏன்டீ! டி. வி. யில் நாடகம் பார்த்தியா...?"

"ஆமா, எதை வச்சுக் கேட்கறீங்க?"

"மூஞ்சி பேய் அறைஞ்ச மாதிரியிருக்கவே கேட்டேன்"

# கல்கி



## தீபாவளி மலர் 1987

வண்ண மயமாய்த் திகழ்கிறது; இதோ,
விமரிசையான வண்ணப்படங்களின் வரிசை:

**ஆன்மீகம்:**

* காஞ்சி பரமாச்சார்யாள், பீடாதிபதி, இளவல்
* ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள்
* நாட்டரசன்கோட்டை ஆயிரம் கண்ணுடையாள்
* சபரிமலை தல புராணக் காட்சிகள்.
* ராமனுக்கு நிகர் ராமனே!

**கலை; இலக்கியம்:**

* இலக்கியக் காதலர்கள்
* கவிதை மடல்.
* வனிதையர் விரும்பும் வளையல்கள்
* கடவுளைக் கனியச் செய்த கவிகள்
* ஒப்பற்ற ஓவியப் பாணிகள்

**பயண அனுபவக் காட்சிகள்:**

* சோளிங்கபுரம் யோக ஆஞ்சநேயர்
* காசி யாத்திரை
* ருஷ்ய, அமெரிக்கச் சுற்றுலா
* ஸெஷல்ஸ் தீவுகள்

**கோகுலம் பக்கங்கள்**

* அழ. வள்ளியப்பா தயாரிப்பு

**அமரர் கல்கி**

எழுதிய குறுநாவல்

* வீணை பவானி

**மர்ம நாவல்**

* ராஜேஷ்குமார்

கதைகள்; கட்டுரைகள்; சிரிப்பு வெடிகள்; மங்கையர் மலர்

இப்போதே உள்ளூர் ஏஜெண்டிடம் பதிவு செய்து கொள்ளுங்கள்.
விலை ரூ. 30/– ரிஜிஸ்தர் தபாலில் பெற ரூ. 35/– அனுப்பவும்.
மானேஜர், கல்கி, சென்னை – 600 032.










தமிழ் நாடு தொழில் துறையில் பின் தங்கியுள்ளது — மத்திய மந்திரி சிதம்பரம்



# கல்கி

1987 அக்டோபர் 11
மலர் 46 இதழ் 11
பிரபவ புரட்டாசி 25



## ஏற்றுமதிக் கொள்கையில் ஓர் ஏமாற்றுக் கொள்ளை!

மீண்டும் ஏற்றுமதி செய்வதற்கென்றே அயல்நாடுகளிலிருந்து பல பொருள்களை இறக்குமதி செய்வதெனில் அதனை அரசு தாராளமாக அனுமதிப்பது மட்டுமல்ல; இதற்கென்றே சில இடங்களைப் பிரத்தியேகமாக ஒதுக்கி, அங்கு இறக்குமதி செய்யலாம், உள்நாட்டுக்குள் கொண்டு வராமல், லாபம் கருதி விலையைச் சற்று உயர்த்தி மீண்டும் ஏற்றுமதி செய்யலாம் என்று ஏற்படுத்தியிருக்கிறது. ஏற்றுமதியாளருக்குத் தரப்படும் பல சலுகைகளையும் தந்து பரிசுகளையும் வழங்கி ஊக்குவிக்கிறது.

மேலெழுந்தவாரியாகப் பார்க்க இது நல்ல கொள்கைதானே என்று தோன்றும். ஆனால் இச்சட்டத்தில் உள்ள ஓர் ஓட்டை நமது ஏழை இந்தியாவை மேலும் ஏழையாக்கிக் கொண்டிருக்கிறது. நமது ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தில் இரண்டு வகை உண்டு. ருஷ்யா, கிழக்கு ஐரோப்பிய கம்யூனிஸ்ட் நாடுகள் ஆகியவற்றுடன் ரூபாய் பேரம் நடத்துகிறோம். அதாவது இந்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யும் பொருள்களின் மதிப்பை இந்நாடுகளிலிருந்து வேறு பண்டங்களை இறக்குமதி செய்துதான் சரிக்கட்ட வேண்டும். இந்நாடுகளில் சம்பாதிக்கும் பணத்தைக் கொண்டு மேற்கு ஐரோப்பாவிலோ பிரிட்டனிலோ ஜப்பானிலோ, அமெரிக்காவிலோ பொருள்களை வாங்க முடியாது. ஆனால் அமெரிக்காவுக்கு ஏற்றுமதி செய்து கிடைக்கும் டாலரைக் கொண்டு ஜப்பானில் நாம் சரக்கு வாங்கலாம். ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்து கிடைத்த பணத்தைக் கொண்டு பிரிட்டனுக்கு நாம் பட்ட கடனை அடைக்கலாம். எனவே டாலர், பவுண்டு, யென், போன்றவற்றுக்குத்தான் சர்வதேச பண மார்க்கெட்டில் மதிப்பு அதிகம். ருஷ்ய ரூபிளுக்கோ இதர கிழக்கு ஐரோப்பிய கம்யூனிஸ்ட் நாடுகளின் பணத்துக்கோ அல்ல. நமது அந்நியச் செலாவணி நிலை மோசமாக இருக்கிறது என்று நாம் கூறும்போது டாலர், யென், பவுண்ட் போன்ற நாணயங்களில் நாம் கடன் பட்டிருப்பதைத்தான் குறிப்பிடுகிறோம்.

இத்தகைய சூழ்நிலையில் இன்று நடப்பதைக் கொஞ்சம் ஆராய்ந்தால் வயிறு எரிகிறது. நமது வர்த்தகர்கள் பலர் டாலர், யென், அல்லது பவுண்டு ஸ்டெர்லிங் நாடுகளிலிருந்து பல பொருள்களை இறக்குமதி செய்து, ருஷ்யாவுக்கோ அல்லது இதர கிழக்கு ஐரோப்பிய கம்யூனிஸ்ட் நாடுகளுக்கோ மீண்டும் ஏற்றுமதி செய்கிறார்கள். அந்நாடுகள் இதைச் சந்தோஷமாகப் பெற்றுக் கொள்ளக் காரணம், உயர்ந்த டெக்னாலஜியுடன் கூடிய மதிப்புமிக்க பொருள்கள், மதிப்பு மிக்க டாலர் இழப்பு இன்றியே அவர்களுக்குக் கிடைப்பதுதான்! ஆனால் நாமோ, மதிப்பு மிக்க நாணயத்தில் மேன்மேலும் கடன்பட்டுப் போகிறோம். பதிலுக்கு, மதிப்புக் குறைவான நாணயத்தைப் பெற்றதாகக் கணக்கு எழுதுகிறோம்! இந்த உருப்படாத ஏற்றுமதிக்குச் சலுகையாக, பரிசாக, ஏற்றுமதியாளருக்கு அரசு அந்நியச் செலாவணி அனுமதிக்கிறது. அந்த அந்நியச் செலாவணியோ மதிப்புமிக்க டாலரிலேயே தரப்படுகிறது! என்ன அநியாயம் இது!

சட்டத்துக்கு உட்பட்டு நமது வர்த்தகர்கள் லாபம் சம்பாதிப்பதைத் தவறு என்று கூற முடியாது. நமது பொருளாதாரக் கொள்கை, வர்த்தகர்களைக் கொழுக்க வைத்து, நாட்டை வறுமையில் ஆழ்த்தி வருவதைத்தான் கவனிக்க வேண்டும். நமது அந்நியச் செலாவணி நிலை மேன்மேலும் மோசமாகி வருகிறது.

எனவே அரசு உடனடியாக விழித்துக் கொண்டு சட்டத்தைத் திருத்த வேண்டும். இரு விதமான ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகம் இனி இல்லை; எல்லாமே டாலர், ஸ்டெர்லிங், யென் அடிப்படையில் நடக்கும் என்று அறிவிக்கலாம். ஒருவேளை கம்யூனிஸ்ட் நாடுகளுடன் நாம் இழைவது இதற்கு இடையூறாக இருக்குமானால், கம்யூனிஸ்ட் நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் ஒரு பொருளின் பல்வேறு பாகங்களில், எழுபத்தைந்து சதமாவது இந்தியத் தயாரிப்பாக இருக்க வேண்டும் என்று விதி செய்ய வேண்டும். இதைச் செய்யாது போனால் அரசின் கொள்கைக்கு ஏதோ உள்நோக்கம் இருப்பதாகவே கருதப்படும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

ஆள் பிடிக்கும் முகாம் அல்ல!

# ஒரே நாளில் 201 ஆபரேஷன்கள்!

பொதுவாக இலவச மருத்துவ முகாம்களில் நமக்கு நம்பிக்கை கிடையாது. எல்லாம் பெயரளவில் இருக்கும். அல்லது பெயருக்காக நடக்கும். பெரும் எண்ணிக்கையைக் காட்டுவதற்காக ஆள் பிடிக்கும் முகாம்களை நாம் நிறையவே பார்த்திருக்கிறோம். குடும்பக் கட்டுப்பாட்டிற்காக, நடக்க முடியாத கிழவர்களை, கல்யாணமாகாதவர்களை, முதலிலேயே ஆபரேஷன் ஆனவர்களை என்று ஆள் திரட்டுவது நமக்கு அத்துப்படியான விஷயம்.

இந்த போலியோ முகாம் மட்டும் விதிவிலக்காகவா இருக்கப் போகிறது ஒரு கிழி கிழித்துவிடலாம் என்று நம்பிக்கையுடன் போனோம். வழக்கத்துக்கு மாறாக நம் நம்பிக்கை வீண் போனது. அதிக விளம்பரங்கள் இல்லாமல் காரியங்கள் நடந்ததில் இருந்தே முகாமின் அடிப்படையாகச் சேவை உணர்வு இழையோடுவது புரிந்தது.

முகாமைத் தொடங்கி வைத்த நெய்வேலி லிக்னைட் காப்பொரேஷன் சேர்மன் எம். பி. நாராயணன், "உற்பத்தி உயர்விலும் பொருளாதார முன்னேற்றத்திலும் நாம் உயர்வதால் மட்டும் நம் தேவை பூர்த்தியடைந்து விடாது. சுற்றுப்புற கிராமங்களை நாம் தத்தெடுத்து வளப்படுத்த வேண்டும்" என்று கூறி இதுபோன்ற நற்பணிகளுக்கு என். எல். சியின் உதவியை உறுதிப் படுத்தினார்.

காத்திருந்த பெற்றோர் முகங்களில் ஏதாவது அற்புதம் நடக்காதா, நம் குழந்தை நடக்காதா என்ற ஏக்கம் எதிரொலித்தது. நான்கு கால் பிராணி போல் தவழ்ந்த ஓர் இளஞ் சிறுவனை நாராயணன் சந்தேகக் கண்ணோடு பார்க்க, உடனே மருத்துவக்குழுவைச் சேர்ந்த டாக்டர் ஆதிநாராயணராவ் அந்தச் சிறுவனைத் தூக்கி நிறுத்தி "இப்போது விளங்காமல் இருக்கும் இவன் கால்களைச் சிகிச்சை முடிந்து, காலிப்பர் கருவி இணைத்துத் தூக்கி நிறுத்தினால் இவன் மட்டுமல்ல இவன் தன்னம்பிக்கையும் உயரும். அதுதான் எங்கள் லட்சியம்" என்று விளக்கியபோது நமக்கு முகாமில் கொஞ்சமிருந்த சந்தேகமும் போனது.

பகவான் ஸ்ரீ சத்ய சாயி சேவா சமிதியின் நெய்வேலி கிளையும், நெய்வேலி சமூக நல மேம்பாட்டுக் கழகமும் இணைந்து இப்புனிதப் பணியை நடத்தினார்கள். அதற்குக் களம் அமைத்துக் கொடுத்து நெய்வேலி பொது மருத்துவ மனையில் வசதிகளும் இலவச உணவும் வழங்க அனுமதி அளித்த என். எல். சி. சேர்மன் எம். பி. நாராயணனும் மின்துறை டைரக்டர் ஸ்ரீனிவாசராகவனும் பாராட்டுக் குரியவர்கள்.

முதலில் தென்னாற்காடு மாவட்டம், அதைச் சுற்றியுள்ள பகுதிகளில் மட்டும் ஆயிரத்துக்கும் மேல் போலியோவினால் பாதிக்கப் பட்ட குழந்தைகள் இருந்ததால் அங்கு மட்டும் நோயாளிகளைத் தேடிப் பிடித்தார்கள். ஆனால் விஷயத்தைக் கேள்விப் பட்டு சேலம், திருச்சி, தஞ்சாவூர் என்று பல மாவட்டங்களில் இருந்தும் பெற்றோர்







குழந்தைகளுடன் வர, முதல் கட்ட வடிகட்டலுக்கே சுமார் 750 நோயாளிகள் திரண்டு விட்டனர்!

வந்திருந்த நோயாளிகளை மூன்று வகையாகப் பிரித்தார்கள். கடின உடற்பயிற்சிகள் மூலம் குணமாகி நடக்கக் கூடியவர்களை அந்தந்த மாவட்ட பெரிய ஆஸ்பத்திரிக்குச் சிபாரிசு செய்தார்கள். இரண்டாவதாக, அதிக அளவு கவனமும் நீண்ட சிகிச்சையும் தேவைப் பட்டவர்களைத் திருப்பதியில் உள்ள ஊனமுற்றோர் இலவச,பொது மருத்துவ மனைக்கு வரச் சொன்னார்கள். மூன்றாவதாகசிறிய ஆபரேஷன் மூலம் சரிசெய்யப்பட்டு காலிப்பர் எனப்படும் செயற்கை நடை கருவிகள் பெற்று நடக்கப் போகிறவர்களுக்கு அன்றே ஆபரேஷன்!

வளைந்த கோணல் கால்கள், சூம்பிய எலும்புக் கால்கள், தவழும் குழந்தைகள், அதுவும் முடியாமல் மூட்டையாகச் சுமக்கப் பட்ட குழந்தைகள், இவர்களின் எதிர்காலம் பற்றிய முடிவுக்கு ஏக்கத்துடன் காத்திருக்கும் பெற்றோர் — என்று இவர்களைப் பார்க்க மனத்தில் சோகம் கவ்வியது.

ஆபரேஷனுக்குவேண்டியமுஸ்தீபுகள் ஜரூராக நடந்து கொண்டிருந்தன. தேவை



யான மருத்துவக் கருவிகள்,மருந்துகள் ஒரு புறம் குவிந்திருக்க, ஆபரேஷனுக்குப் பின் நோயாளிகள் படுக்க, பல வார்டுகளில் பாய்கள் சுத்தமாக விரிக்கப்பட்டிருந்தன. இது போன்ற முகாம்களில் எல்லாருக்கும் கட்டில் வசதி தர முடியாது என்றாலும் பிற வசதிகளை மிகச் சுத்தமாகவும் எளிதாகவும் கிடைக்க வழி செய்த தலைமை மருத்துவ அதிகாரி டாக்டர் சௌந்தரபாண்டியன், நெய்வேலி சமூகநல மேம்பாட்டுக் கழகத்துக்கும், சாயி சேவா சமிதி நெய்வேலிக்கும் தலைவர் என்பது குறிப்பிடத் தக்கது.

அறுவை சிகிச்சை நிபுணர்கள் குழு திருப்பதியில் இருந்து வந்திருக்க,நெய்வேலி மருத்துவர்களும் உடன் உதவினார்கள். சேவா சமிதியின் உறுப்பினர்களான பெண்கள், மாணவர்கள், உயர் அதிகாரிகள் எல்லாரும் சிறிதும் வித்தியாசம் பாராமல் சேவை ஒன்றையே முழு மூச்சாகக் கொண்டு பணி புரிந்த பாங்கு மெய் சிலிர்க்க வைத்தது.

குழந்தைகளை ஆபரேஷன் தியேட்டரில் கொண்டு விடுவது, பிறகு கட்டுப்போடும் பிரிவுக்கு எடுத்துச் செல்வது, அங்கிருந்து குழந்தைகளை போஸ்ட் ஆபரேடிவ் வார்டுக்கு வண்டியில் தள்ளிச் செல்வது என்று சாயி சமிதி உறுப்பினர்கள் ஒத்துழைத்திருக்காவிடில் ஒரே நாளில் 201 ஆபரேஷன் சாத்தியமில்லை என்றார் திருப்பதி குழுவைச் சேர்ந்த இளம் அறுவை டாக்டர்.

ஆபரேஷன் முடிந்த பலருக்கு நடை கருவிகள் உடனேயே வழங்கப்பட்டன. அக்டோபர் மாத இறுதிக்குள் 201 பேருக்கும் நடைகருவிகள் வழங்கப்படும். இதற்கே இரண்டு லட்சத்துக்குமேல் செலவாகும்.

இந்த முகாமின் வெற்றிக்குக் காரணமாக பின்புலத்தில் வேலைகள் செய்த டாக்டர் ஜெயராஜ்,"இந்தச் சிகிச்சை முகாமை விட முக்கியமானது நோய்த்தடுப்புத்தான். கிராம மக்கள் அறியாமையால் குழந்தைகளுக்குப் போலியோ தடுப்பு ஊசிகளைப் போடாமல் இருந்துவிடுகின்றனர். எதிர்கால இந்தியாவின் குழந்தைகள் முடமாவதைத் தடுக்க என். எஸ். எஸ், லயன், ரோட்டரி போன்ற சமூக இயக்கங்கள் பாடுபட வேண்டும்." என்று மனதார விரும்பினார்.

சத்தம் போடாமல் சாதனைப் பட்டியலை வளர்த்துக் கொண்டு செல்வது என். எல். சிக்கு வாடிக்கையாகி விட்டது. எனவே, சமீபத்தில் நெய்வேலியில் நடந்த இந்த இலவச போலியோ அறுவை சிகிச்சையும் நடை கருவி வழங்கும் முகாமும் சாதனையாகிப் போனது ஆச்சரியமில்லை.

— நளினி சாஸ்திரி



# சிரிப்பு மிதக்கும் வகுப்பறை!

- "தலைவரே! ஜட்டியோட லேகஸ் ஹாஸ்டலைச் சுற்றி ஓடியாச்சு. ஒரு பக்க மீசையை எடுத்தாச்சு. இனியாவது உட்காரலாமா?"

  "டேய்... ஃபர்ஸ்ட் இயர் ஸ்டுடண்ட் உனக்கு அதற்குள்ளே அவசரமா?"

  "நான் ஃபர்ஸ்ட் இயர் ஸ்டுடண்ட் இல்லேப்பா. புதுசா அப்பாயிண்ட் ஆகி வந்திருக்கிற புரொபஸர்!"

  — ஸ்ரீபதி, ஒ. மேட்டுப்பட்டி.

- ஆசிரியர்: பத்து லட்ச ரூபாயோடு நாற்பது லட்சத்தைக் கூட்டினால் என்ன வரும்?

  நடிகர் மகன்: இன்கம்டாக்ஸ் ரெய்ட் வரும்!

  — சங்கர், சென்னை — 75.

- ஆசிரியர் (கோபமாக): "உங்களுக்குப் பாடம் சொல்லித் தருவதைவிட வயல்காட்டில் போய் வேலை செய்தாலாவது பலன் உண்டு!"

  ஒரு மாணவர்: "ஆக, 'போரடிப்பது' தான் உங்கள் லட்சியம் என்று சொல்லுங்கள்!"

  — கே. கணேஷ், சென்னை — 6.

- ஆசிரியர்: இப்பொழுதெல்லாம் என்ன படிக்கிறீர்கள்? அந்தக் காலத்துப் பையன்கள் கேள்வி கேட்டால் பதிலைப் பிட்டுப் பிட்டு வைப்பார்கள்!

  ஒரு மாணவன்: இப்பொழுதும் பிட்டு தான் (Bit) வைக்கிறோம்.

  — ஜெயவித்யாபதி, நீடாமங்கலம்.

- ஆசிரியர் பையன்களைப் பார்த்து: இடப்புறம் அமர்ந்துள்ள நீங்கள் வலப்புறமாகவும், வலப்புறம் அமர்ந்துள்ள பெண்கள் இடப்புறமாகவும் அமரும்படி வகுப்பை மாற்ற வேண்டும்.

  பையன்: ஏன் சார்... அப்படி...?

  ஆசிரியர்: என் வலப்புறக் கழுத்து ஒரே வலியாக இருக்கிறது. வகுப்பை மாற்றினால் வலியும் மாறுமே என்றுதான்...!

  — எஸ். மாணிக்கவாசகம், பட்டுக்கோட்டை.

- ஆங்கில ஆசிரியர்: இரவை 'நைட்' என்றும் காலையை 'மார்னிங்' என்றும் ஆங்கிலத்திலே சொல்றோம். அதுபோல், 'மதியத்தை' எப்படிச் சொல்றது?

  மாணவன்: 'மேட்னி'ன்னு சார்...

  — கி. நாகராஜன், காரம்பக்குடி.

- ஆசிரியர்: ஏண்டா ராமு, வரவர லேட்டா வர்றியே?

  மாணவன்: கின்னஸ் புத்தகத்தில் இடம் பெறத்தான் சார்.

  — கி. காந்தி, பள்ளத்தூர்.

(ரூ. 200 பரிசு ஏழு நகைச்சுவைத் துணுக்குகளுக்குச் சமமாகப் பகிர்ந்தளிக்கப்படுகிறது.)

## கதிரவன் ஒளியில் கனிந்த சூரிய காந்தி வித்துக்களின் சத்து...

## உடம்புக்கு இலேசு இலேசான உணவுகளை சமைக்கும் எண்ணெய்

புதிய ஃப்ளோரா, சுத்திகரித்த சூரியகாந்தி எண்ணெய், கண்ணாரக் காண்பீர்கள் இதிலே பொன்னான தூய்மை, பூப்போல் இலேசுத் தன்மை, சமையலே இலேசு, உணவு தோறும் இலேசு, சீரணிக்க இலேசு, உடம்புணர்விலும் ஓகோ இலேசு! தேகத்தில் கொலஸ்ட்ரால் கொழுப்புச் சத்து திரளாமல் தடுத்திட— சமைப்பீர் புதிய ஃப்ளோராவினால்; எந்தச் சமையலிலும் சொந்த ருசி வந்து இழையும். உணவிலே சுவை காண்பீர் சுகாலத்தின் சூரியோதயம்: பூப்போல் இலேசான புதிய ஃப்ளோரா.






**புதிய ஃப்ளோரா**
ரிஃபைன்டு சூரிய காந்தி எண்ணெய்

சீரணிக்க இலேசான சுவை உணவு சமைக்கிறது.

லிப்டன்

வேண்டும்போதெல்லாம் சுவைத்திட
மொரு மொரு பிஸ்கட்
போர்ன்விடாவின் குணம் நிறைந்தது!







சந்தேகமென்ன! காட்பரிஸ் தயாரிப்பேதான்!

காட்பரிஸ்
போர்ன்விடா
பிஸ்கட்

# அச்சங்கள் அகலுமா? தோழமை துளிர்க்குமா?

## இலங்கையில் இன்றைய நிலை — II

— வாஸந்தி

ஜெயவர்த்தனவின் அமைச்சரவையில் மந்திரிப் பதவி வகிக்கும் காமினி திசநாயிக இந்த ஒப்பந்தத்தின் தீவிர ஆதரவாளர், காரண கர்த்தாக்களில் ஒருவர் என்று சொல்லப்படுகிறது. அவரது நாற்பத்து மூன்று வயதை விட இளமையாகத் தெரிகிறார். மிகத் தெளிவாகச் சுத்தமான ஆங்கிலத்தில் பேசுகிறார்.

"இந்த ஒப்பந்தம் பரவலாக எல்லோராலும் வரவேற்கப்பட்டிருக்கிறது. நான்கு வருஷங்களாக இலங்கையில் நேர்ந்த இனக் கலவரங்களைக் கண்டும் அனுபவித்தும் வருபவர்கள் வரவேற்காமல் இருக்க முடியாது. இலங்கை அரசு ஆரம்ப காலத்தில் செய்த சில மன்னிக்க முடியாத தவறுகளினால் தமிழர்களுக்கு நிறையக் கஷ்டங்கள் ஏற்பட்டு விட்டன. 'சிங்களம் மட்டும்' என்ற சட்டம்தான் கோளாறுகளுக்கெல்லாம் ஆரம்பம். அந்தச் சட்டம் ரொம்ப அவசர முறையில் கையாளப்பட்ட விதம் தமிழர்களை மிகவும் பாதித்து விட்டது. அந்தச் சட்டம் வராதிருந்திருந்தால் தமிழர்களே சிங்களம் கற்றுக் கொள்ள இசைந்திருப்பார்கள்."

"தமிழரது பாரம்பரியப் பிரதேசமான கிழக்குப் பகுதியில் சிங்களக் குடியேற்றம் செய்யப்படுவதைப் பற்றி நீங்கள் என்ன சொல்கிறீர்கள்?"

"இது மிகவும் மிகைப்படுத்தப்பட்ட குற்றச்சாட்டு. இலங்கையில் சில இடங்களில் ஜனத்தொகை மிக அதிகமாகவும் மற்ற இடங்களில் குறைவாகவும் இருக்கிறது. நாட்டின் வளர்ச்சியை முன்னிட்டுப் பங்கீடுகள் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டிருக்கிறது. இருக்கும் தமிழர்களை விரட்டி, யாரும் சிங்களவர்களைக் குடியேற்றவில்லை. ஜனங்கள் இல்லாத காட்டுப் பகுதிகளில்தான் சிங்களவர்கள் போயிருக்கிறார்கள்."

"தேர்தல் வாக்கெடுப்பில் இது தமிழர்களுக்கு எதிராகப் போகாதா?"

"எதிராகப் போக வேண்டும் என்கிற காரணத்துக்காக நிச்சயம் செய்யப்படவில்லை. அவர்கள் அதீதமாக உணர்ச்சிவசப்படுகிறார்கள். ஒரு நாட்டிற்குள் ஓர் இடத்திலிருந்து இன்னோர் இடத்தில் போய்த் தங்க எல்லாருக்கும் சுதந்திரமுண்டு. தமிழர்கள் கொழும்பிலும் மற்ற தெற்குப் பகுதிகளிலும் நிறைய இருக்கிறார்கள். அதற்கு ஏதேனும் தடை உண்டா?"

"அரசியல் காரணங்களுக்காகத்தானே இந்தியத் தமிழரின் பிரஜா உரிமை பறிக்கப்பட்டது!"

"ஆமாம். அது மிக மோசமான செயல்தான். சிங்களப் பாரம்பரிய மாநிலமான கண்டித் தொகுதியில் '48 இல் பாராளுமன்றத் தேர்தலில் வெற்றி பெற்ற அத்தனை பேரும் இந்தியத் தமிழர்கள். அதுவும் கம்யூனிஸ்ட் கொள்கை கொண்டவர்கள் என்கிற நிதர்சனத்தைக் கண்டதும் அப்போதிருந்த அரசு, இந்த நிலைமை நீடிக்குமானால் சிங்கள



• "இந்தியப் படைகள் இருக்கும் வரை சிங்களவருக்கு அச்சம்..."

• "இந்தியப் படைகள் இருக்கும் வரைதான் தமிழருக்குப் பாதுகாப்பு..."

இனத்துக்கும் பாரம்பரிய கலாசாரத்துக்கும் ஆபத்து என்று பயந்து விட்டது. அப்பொழுதுதான் பௌத்தசங்க எழுச்சி மும்முரமாக இருந்தது. பிரச்னைக்குத் தீர்வு காண வேறு நல்ல வழிகளைக் கையாண்டிருக்கலாம். அப்படிச் செய்யாமல் இந்தியத் தமிழரின் பிரஜா உரிமையையே பறித்து விட்டார்கள்.

"தமிழர்களுக்கு அநேகம் அநீதிகள் இழைக்கப்பட்டு விட்டன, அரசியல் தவறுகளினால். இனிமேலும் அவற்றை அங்கீகரிக்காமல் விட முடியாது என்கிற நினைப்பில்தான் இந்த ஒப்பந்தம் ஏற்பட்டது. நிறையப் பிரச்னைகள் இன்னும் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் எல்லாரும் விவேகத்துடன் செயல்பட்டால் நிச்சயம் பலன் இருக்கும்."

"பௌத்த மத குருமார்களுக்கு அரசியலில் நிறையச் செல்வாக்கு இருப்பதாகச் சொல்கிறார்களே?"

"அரசியல் நடவடிக்கைகளைப் பாதிக்குமளவுக்கு ஏதும் செல்வாக்கில்லை."

**கா**மினி திசநாயக விடம் பேசிவிட்டு அவருடைய காரியதரிசி சந்திர ஸோமாவிடம் பேசினால் திகைக்க வைக்கிறார்: "என்னுடைய மந்திரியின் கருத்துக்கள்தான் எனக்கும் இருக்க வேண்டும் என்ற அவசியம்என்ன?" என்று கேட்கிறார்! பிறகு தொடர்கிறார்: "ஒப்பந்தம் கையெழுத்தான 120 மணி நேரத்துக்குள் ஆயுதங்கள் ஒப்படைக்கப்படும் என்றார்கள். பிறகு அறுபத்தைந்து சதம் ஒப்படைக்கப்பட்டு விட்டதாகச் சொன்னார்கள். ஆனால் உண்மையில் இருபத்தைந்து சதம் கூட ஒப்படைக்கப்படவில்லை. இந்தியப் படைகள், போர்க்கப்பல்கள் முதலியன இலங்கையில் இருப்பதே சிங்களவரை அச்சுறுத்துகிறது. அவர்களுடைய பயம் சரித்திர காலம் தொட்டு இருந்து வருகிற ஒன்று. எங்கள் தேசம் மிகச் சிறிது. சோழர் பாண்டியர் படையெடுப்புக்களையே நாங்கள் இன்னும் மறக்கவில்லை!"

சந்திர ஸோமா குறிப்பிட்ட பயம் பல சிங்களவரிடம் இருப்பது உண்மையே என்பது வேறு பலரிடம் பேசிக் கொண்டிருந்த போது புரிந்தது.

அன்று இரவு டி. வி. செய்தியில் எல்லாப் புத்த பிக்குகளும் அடையாளச் சீட்டு வைத்திருக்க வேண்டியது அவசியம் என்று அரசு அறிவித்தது. தடை செய்யப்பட்ட ஜே. வி. பி. பயங்கரவாதிகள் (சிங்கள இடதுசாரி தீவிரவாதிகள்) புத்த பிக்கு வேஷத்தில் அலைகிறார்கள் என்று கவனத்துக்கு வந்திருப்பதாகச் சொன்னார்கள்.

**ம**றுநாள் நிதி மந்திரி டிமெல்லைப் பார்த்தேன். இந்த ஒப்பந்தம் நிறைவேற அவர் முக்கிய காரணம்.

"வெகு காலமாக நான் இத்தகைய ஓர் ஒப்பந்தத்திற்காகப் பாடுபட்டு வருகிறேன். நான்கு வருஷ இனக்கலவரங்கள் எங்கள் பொருளாதாரத்தைச் சர்வநாசமாக்கி விட்டன. தேயிலைக்கு அடுத்து டூரிஸம் முக்கிய அந்நியச் செலாவணி வருமானமாக இருந்தது. அதுவும் அடியோடு நின்றுவிட்டது. அதைத் தவிர தமிழர்களின் துயரங்கள் உண்மையானவை. கோரிக்கைகள் நியாயமானவை. எப்பொழுதோ அதைக் கவனித்து முடிவெடுத்திருக்க வேண்டும். காலம் கடந்து பெரிய நஷ்டமேற்பட்டு விட்டது. இந்த ஒப்பந்தம் எனக்கு நல்ல நம்பிக்கையைக் கொடுக்கிறது. இந்தியா செய்திருக்கும் உதவி மகத்தானது. அறுபத்தைந்து சதவிகிதம் ஆயுதச் சரண் ஆகிவிட்டது என்கிறார்கள். அது உண்மையானால் ரொம்பவும் தெம்பூட்டும் செய்தி அது."

"அதனால் தாங்கள் பலவீனப்பட்டுப் போய் விட்டதாகவும் இந்திய ராணுவம் உள்ளவரைதான் தங்களுக்குப் பாதுகாப்பு என்றும் தமிழர்களிடையே பயமிருக்கிறது!"

"அப்படிப்பட்ட மனச்சோர்வு இருக்கத்தான் செய்யும். ஆயுதம் ஏந்திப் பழகி விட்டார்கள் அல்லவா? விரைவில் இடைக்கால சிவிலியன் நிர்வாகம் அமைக்கப்பட்டுப் புனருத்தாரண வேலைகளில் ஆழ்ந்து விட்டார்களானால் தன்னால் தைரியம் வரும். பரஸ்பர நம்பிக்கைகளை இரண்டு இனமும் வளர்க்க வேண்டும். தமிழர்கள் முன்பு கோரிய எல்லா அம்சங்களும் இந்த ஒப்பந்தத்தில் இருக்கின்றன. அரசைப் பொறுத்த வரை இந்த உடன்படிக்கையை நிறைவேற்றுவதில் மிகத் தீவிரமாக இருக்கிறோம்."

"ஆயுதம் ஏந்துவதைத் தவிர வேறெதுவும் தெரியாமல் போய் நிற்கும் தமிழ் இளைஞர்களுக்கு என்ன செய்யப் போகிறீர்கள்?"

"நிறையப் புனர்வாழ்வுத் திட்டங்கள் போட்டுக் கொண்டிருக்கிறோம். அவர்கள் பழசையெல்லாம் மறந்து ஜனநாயக அமைப்புடன் ஒன்றி வாழக் கற்றுக் கொண்டால் பிரச்னை இருக்காது!"

பழசையெல்லாம் மறந்து விட்டு வாழ்வது என்பது லேசுப்பட்ட காரியம் இல்லை என்று நான் யாழ்ப்பாணத்துக்குச் சென்றபோது புரிந்தது. ஜனநாயக அமைப்பில் ஒன்றி வாழப் போராளிகள் இணங்குவார்களா என்கிற கவலையே கூட எனக்குள் ஏற்பட்டு விட்டது!

கொழும்பிலிருந்து யாழ்ப்பாணத்துக்குப் பயணிகள் விமானப் போக்குவரத்து இல்லை. இந்திய ஹைகமிஷன் மூலமாக, ஒரு பத்திரிகைக்காரர் என்ற முறையில், ஸ்ரீலங்கா விமானப்படை விமானத்தில் புறப்பட்டேன். என்னுடன் சீமா குஹா என்ற டைம்ஸ் ஆஃப் இந்தியா நிருபரும் இருந்தார். மற்றவர்கள் சிங்கள ராணுவப் படையினர். இந்திய செஞ்சிலுவைச் சங்கத்தைச் சேர்ந்த இருவர். கூட உருளைக் கிழங்கு வெங்காய மூட்டைகள்!

யாழ்ப்பாணப் பயணம் முற்றிலும் மாறுபட்ட ஓர் அனுபவம்.



# கூட்டுப்புழுக்கள்

**அ**லங்கார செட்டிங், ஆடம்பர இசை, அவுட்டோர் பச்சை, சியாங்டியாங் டான்ஸ் மூவ்மெண்ட்கள் எல்லாவற்றையும் தவிர்த்து, சில ஒண்டுக் குடித்தனங்களை, அவர்களுக்குள் மலரும் உறவுகளை, உறுமும் உரசல்களை, வெடிக்கும் விரிசல்களை மட்டும் படம் பண்ணச் சாமான்யத் தைரியம் போதாது. அந்த அசாதாரணத் துணிச்சல் ஆர். சி. சக்திக்கு இருக்கிறது.

**அமலா:** கொஞ்சம் சோகையான முகம். அம்மா கட்டாயப் படுத்தும் தொழில் பிடிக்காத போது குமுறும் வேகம். தன் மனசுக்குப் பிடித்தவன் வேறு போர்ஷன் மாமிக்காக பவுடர், சோப் வாங்கப் போவதை அறியும் போது பொங்கும் கோபம். சமாதானத்திற்காக அவனே வெள்ளைக் கொடி தூக்கும் போது பணிந்து போகும் பதவிசு. வேலைக்கு அவன் டெபாஸிட் பணம் கட்டத் தன் நகைகளை விற்று... அம்மா கொடுக்கும் அத்தனை அடிகளின் வேதனையின் மத்தியிலும் காரியத்தைச் சாதித்து விட்ட திருப்தியை வெளிப்படுத்தும் தோரணை — ஷோ கேஸ் அமலாவுக்குள் சோபிக்கத் தெரிந்த இத்தனை அமலாக்களா!

**ரகுவரன்:** இவர் ஹீரோவா, செகண்ட் ஹீரோவினு? இன்னும் கொஞ்சம் ரோஷம் இத்யாதி இருந்திருந்தால் நன்றாயிருந்திருக்காது? பணத்தைக் கொடுத்து விட்டு ஒய். விஜயா 'பலான' எண்ணத்தோடு அணுகும் போது, பதறிப் போய் பணத்தை விட்டெறிகிறாரே, அந்த இடம் மட்டும் அழுத்தம்.

**சந்திரசேகர்:** 'ஏன் மங்கா, பேசாம என்னையே கட்டிக்கயேன்' என்று சிரிப்போடு சிரிப்பாக அப்ளிகேஷன் போட்டு, 'போங்க சார், உங்களுக்கு எப்பவுமே கிண்டல் தான்' என்று அது விளையாட்டாக நிராகரிக்கப் படும்போதுவிழிகளில்வேதனையோடு அந்தக் கசப்பை விழுங்கும் நேர்த்தியே நேர்த்தி. 'ஏண்டா சீர், செனத்தி, கைல பணம், ஸ்கூட்டர்னு கூலி வாங்கிட்டுத் தாலி கட்றேன் நீங்களே, அப்ப நீங்க என்ன ஆம்பிளை வேசிங்களா?' என்று போடுகிறாரே ஒரு போடு, வசனம் காரம் என்றால் இவர் கொடுக்கும் அழுத்தம் அதிகாரம்!

**எஸ்.எஸ்.சந்திரன்:** மூன்று பெண்களுக்கு அப்பா ஆன பின்னும் சபலிஸ்ட். இழுத்து வந்து அரசியலை நுழைக்கும் சில டயலாக்ஸ் இன்ஸ்டண்ட் சிரிப்பு. புரோக்கர் ஏற்பாடு செய்யும் 'அந்த மாதிரி' பெண், அவர் மகளாகவே இருக்கும் போது கிடைக்கிறதே ஒரு ஷாக். மனிதர் நன்றாகவே செய்திருக்கிறார்!

ஒவ்வொரு காரெக்டரையும் பற்றி 'இரண்டு வரிகள் குறிப்பிட ஆரம்பித்தால் கூடத் தனியாக இலவச இணைப்புத்தான் போட வேண்டும். அத்தனை காரெக்டர்கள்!

சாலையை அடைத்து நூறு புள்ளி பத்து வரிசைக் கோலம் போட்டிருக்கிறார் ஆர். சி. சக்தி. சில வ்ரிசைகளைக் குறைத்திருந்தால், இன்னும் தெளிவு. இன்னும் அழகு. இன்னும் பளிச்.

— ஜெயமன்மதன்



# நிழல்

## 27

இந்த இடத்தில் மனைவி தர்ப்பைப் புல் தான். வெறும் அடையாளம்தான். புல் மனைவியின் அடையாளம். மனைவி சமூகத்தின் அடையாளம்—நிர்ப்பந்தம். ஊருக்காக ஏற்படுத்திக் கொண்டிருக்கும் உறவு. மனசு அந்த உறவில் லயிக்காத போது வெறும் கௌரவம் — வறட்டு கௌரவம்.

மனைவியற்று நிறையப் பேர் இருக்கிறார்கள். அம்மா இல்லாமல் யாராவது இருக்கிறார்களா? மகள், சகோதரி, தமக்கை, மைத்துனி என்ற பெண் உறவுகள் இல்லாது வாழ்கிறார்கள். அம்மா என்கிற நினைப்பில்லாமல் யாராவது இருக்கிறார்களா? பெண், அம்மாவாய் இருக்கிற போது எவ்வளவு அருமையான் உறவு. இடி இடித்து மழை பெய்கிற போது, மின்னல் வெட்டிச் சத்தம் சீறிறங்குகிற போது, அர்ஜுனா, அர்ஜுனா என்று கூப்பிடுகிறோமே தவிர, அம்மாவிடம்தானே ஒட்டிக் கொள்கிறோம். கல் குத்தினாலும், கதவு இடித்தாலும் அம்மா என்றுதானே உதவிக்குக் கூப்பிடுகிறோம். மூன்று வயசு வரை நெஞ்சில் இறுக்கிக் கொண்டு பிறகு மண்ணில் தள்ளி விட்டுவிடுகிறார்கள். பிறகு கம்பளிப் போர்வை, தலையணை, புத்தகம், நதி, பூமி, கவிதை, தெய்வம் எல்லாம் அம்மாவாய் இருக்கிறது. எது காப்பாற்றுமோ, எது கை கொடுக்குமோ எது இதமோ அவையெல்லாம் தாயின் ரூபமாய் இருக்கிறது.

எல்லா இடங்களிலும் அம்மாவைத் தேடப் போய்ச் சிக்கல் வந்துவிடுகிறது. மனைவியிடத்திலும் அம்மா வேண்டியிருக்கிறது. பெண் போகம் கூட கருப்பைக்குள் மறுபடி நுழைந்து கொள்ளும் ஜாக்கிரதை உணர்வால்தான் என்று எங்கோ படித்தது நினைவுக்கு வந்தது. அம்மா மட்டுமே உறவாய், உலகமாய்ப் போனதால்தான் இந்த இழப்புப் பெரிதாய்த் தெரிகிறது. அம்மாதான் அப்பா. அம்மாதான் குரு. அம்மாதான் ஸ்நேகிதம். அம்மாதான் வேலைக்காரி. அம்மாதான் தெய்வம். இருபது வயசு வரைக்கும் எல்லா விஷயங்களும் அம்மாவால் நிச்சயிக்கப்பட்டு அம்மாவால் துவக்கப்பட்டு, அம்மாவால் வழி நடத்தப்பட்டு, அம்மாவுக்காக, அம்மா சொல்படி, அம்மாவின் துணையோடு தனக்கு நடந்திருக்கிறது.

பாலகுமாரன்

# யுத்தம்

இடையில் சற்று நகர்ந்து கொண்டாலும் இருபது வருடப் பழக்கம் கட்டிப் போட்டிருக்கிறது. கல்யாணமான பிறகு, அம்மா மாதிரி ஒரு பெண் என்று மனைவியைத் தொட்ட பிறகு, அங்கேயும் அம்மாவைத் தேடி அலைகிற குணம் அதிகரித்து விட்டது. லலிதா அம்மா மாதிரி இல்லை. அப்பாவாகக் கூட இல்லை. அந்நியமாய் இருந்தாள்.

சாவுக்குக் கூட வராமல் ஒரு பெண் இருப்பாளா என்று வியக்க வைத்தாள்.

சின்னக் கல்லை அம்மாவாய் நட்டு வைத்து, நமஸ்கரித்து, தர்ப்பணம் பண்ணி முரளி எழுந்திருந்தான். காலருகே கிடந்த தர்ப்பைப் புல்லைக் கசக்கி மூலையில் போட்டான்.

ஜெனரல் மானேஜர் அருகே வந்தார்.

''ஸாரி'' என்று கைகளைப் பிடித்துக் கொண்டார்.

முரளி திமிட நேரம் மௌனமாய் அம்மா இழந்த துக்கத்தில் அமைதியாய் இருந்தான்.

''யார் எத்தனை ஆறுதல் சொன்னாலும் இந்த இழப்புக்குப் பரிகாரமே இல்லை. நான் அனுபவிச்சிருக்கேன். ரொம்ப லோன்லியா ஒரு நினைப்பு நிச்சயம் வரும். அநாதைன்னு ரொம்ப தோணும். உன் கூடப் பேசிட்டுப் போனாளே... பெரிய விஷயம் இது. ரொம்பப் பெரிய கொடுப்பினை உனக்கு. எங்கம்மா செத்துப் போன போது நான் ஆறாயிரம் மைல் தூரத்தில் இருந்தேன். விஷயமே தெரியலை. இருந்தாலும் அன்னிக்கு நான் செய்த எல்லா விஷயமும் சரியா இல்லை. ஏதோ சங்கடம். முப்பத்தியாறு மணி நேரத்துக்கப்புறம் தந்தி கிடைச்சது. எல்லாம் முடிஞ்சு இப்படி ஒரு கல்லு காட்டி இதுதான் அம்மான்னு... கல்லு! கட்டை விரல் உசரம் கூட இல்லாத கல்லு... மண்ணுலேர்ந்து பிடுங்கி நெஞ்சுல வச்சுண்டு அழுதேன். கல்லைத் தலைல வச்சுண்டு கதறினேன். நான் எம். பி. ஏ., ஜெனரல் மானேஜர் இதெல்லாம் மறந்தே போச்சு. பள்ளிக்கூடப் பையன் மாதிரி... அரை டிராயர் பையன் மாதிரி... யூ நோ... எங்கம்மாவுக்கு முன்னாடி ரொம்ப நாள் வரைக்கும் — அம்பது வயசு வரைகூட நான் அரைடிராயர்தான். முட்டாள்தனமா இருக்கும் அவ பேச்சு. ஆனாலும் சரின்னு கேட்கத் தோணும்.''

முரளி முகம் திருப்பிக் கொண்டான். கண்ணில் ஜலம் கோத்துக் கன்னத்தில் வழிந்தது.

''ஈஸி... ஈஸி முரளி...'' கிட்டத்தட்ட ஜி. எம். அவனைக் கட்டிக் கொண்டார்.

''உறவு அற்புதம். இந்த உறவு மகா அற்பு



தம். முக்கியமா ஆண்களுக்கு அம்மா மாதிரி நினைப்பு இருக்கே, அது பேயா ஆட்டும். ஆனா ஆடப்படாது. விடுபடணும். இந்த உறவுக்கு இணையா இன்னொண்ணு கிடைக்கவே கிடைக்காதுன்னு புரிஞ்சுக்கணும். தேடக் கூடாது. தேடி நிலை அடிச்சுக்கக் கூடாது. மறுபடி வயத்துக்குள்ளே போக முடியுமா? முரளி, தேர் இட் எண்ட்ஸ்.

''முரளி, லலிதாவோட மனஸ்தாபம்னு கேள்விப்பட்டேன். சங்கரன் சொன்னார். எனக்கு டீடெய்ல்ஸ் வேண்டாம். சரியா வரலைன்னா நீ கொஞ்ச நாள் தனியா இரு. உன் அம்மாவோட, அவ நினைப்போட இரு. அது குறைஞ்ச பிறகு வா, போறும்.

லலிதா இங்கே இதுக்கெல்லாம் வரலையேன்னு கோவப்படாதே. அவளும் இப்ப அம்மா. அவ மடில இருக்கிற குழந்தைக்கு, அவ வயத்துல இருக்கற குழந்தைக்கு அவ அம்மா. வந்திருக்கலாம். ஏனோ வரலை. விட்டுடு. ஒரு அம்மான்னு நினைச்சு விட்டுடு. வருத்திக்காதே. வருத்தப்பட வைக்காதே.''

நான் வேலையை விட்டுரலாம்னு இருக்கேன் சார்.''

''ஏன்?''

''இந்தக் கூலி வேலையே எனக்கு ஒரு கூலியாதான் கிடைச்சது. புருஷனா இருக்கறதுக்குக் கூலி. என்னாலே புருஷனா இருக்க முடியலை.''

''புரியறது. பொண்டாட்டிக்கு ஏத்த புருஷனா இருக்கறது சிரமமா இருக்கு. புருஷனுக்கேத்தபடி இருன்னு சொல்றதுலயும் வன்முறை இருக்கு. ஆனா முரளி, அப்பாவா இரேன்.''

''எதுக்கு சார்?''

''உனக்கு அப்பா இல்லை முரளி. அதனாலதான் இத்தனை கஷ்டம். அப்பா இல்லாத அம்மான்னுதான் இத்தனை ஆதங்கம். அதனாலதான் அம்மாவுக்கு உன் மேலே இத்தனை பிடிப்பு. புருஷன் கூட இருந்திருந்தா அவ உன்னை விலக்கியிருப்பா. நீ போ உன் வழிலன்னு உன்னைக் கத்தரிச்சு விட்டிருப்பா. அப்பா இல்லாத கொடுமைதான் உன்னை இப்படி அலைக்கழிச்சுருக்கு. உன் குழந்தைக்கும் அப்படி ஒரு நிலை வரணுமா?

''டிராமால மெயின் ரோல் வரலைன்னா ஸைட் ரோல் பண்ணு முரளி. சரியா நடிச்சா ஸைட் ரோல் கூட க்ளாப்ஸ் வாங்கும். ஜோக் அடிக்கலை. கண்காணாத எங்கியும் ஓடறதை விட வேறே ரோல் எடுத்துக்கோ. அக்கௌண்ட்ஸ் புடிக்கலையா பர்சேஸ்லே இரு. ஸேல்ஸுக்குப் போ. டெஸ்பேட்சாவது பண்ணு. வேலையை விடாதே. எங்கேயாவது போய் ஏதாவது பண்றதை விட இங்கேயே இரேன். தனியா கொஞ்ச நாள் இரு முரளி. நான் இதையே சங்கரன்கிட்டேயும் சொன்னேன். தனிமையைப் புரிஞ்சுண்டு வா. குடித்தனம் ரொம்பச் சுலபமா இருக்கும். முடிஞ்சா வந்து குழந்தையைப் பார்த்து நாலு வார்த்தை பேசிட்டுப் போ. நான் பிரிக்கலை முரளி. விலக்கியிரு. புரியும். கல்யாணம் பண்ணி வீட்டோட மாப்பிள்ளையாயிட்ட பிறகு அம்மா ஞாபகம் ஜாஸ்தியாற மாதிரி, லலிதா ஞாபகமோ, குழந்தை ஞாபகமோ ஜாஸ்தியாகும். அப்படி ஆச்சுன்னா அந்த உணர்ச்சிக்கு மதிப்பு கொடு. மறுக்காதே. மறைக்காதே. அப்ப நான்...''

ஜி. எம். விடைபெறுது போனார். காரில் ஏறினார். வண்டி கிளம்பி மறைந்தது.

சங்கரன் அருகே வந்தார்.

''நான் என் குழந்தை பிரச்னையை அவர்கிட்டச் சொன்னேன். அவர் இது இரண்டு பேர் பிரச்னைன்னு சொல்லி இரண்டு விதமாவும் யோசிச்சு உன்கிட்டப் பேசினார். இதை ஏன் அவர்கிட்டே சொல்லணும்னு கேட்கலாம். எனக்கு மூணும் மனுஷனா யோசிக்கத் தெரியலை. யோசிக்கற பலம் இல்லை. அப்படி யோசிச்சு நான் பேசினாலும் நான் என் குழந்தை பக்கம் பேசறேனென்னு பட்டா அதை நிவர்த்திக்க வழி தெரியலை. அப்படியே என் குழந்தை சார்பா நான் பேசினாலும் தப்பாப் படலை. ஏன்னா அவ அம்மா இல்லாத பொண்ணு! பதினேழு வயசுல அம்மாவைப் பறிகொடுத்த பொண்ணு. அதை அந்தக் குழந்தை தாங்கிண்டது. அம்மா இல்லைன்னு சொன்னா நான் வருத்தப்படுவேனேன்னு அதை மென்னு முழுங்கிட்ட பொண்ணு. பதினேழு வயசுல முழுங்கிண்ட பக்குவம் திமிர் கொடுத்திருக்கலாம். கல்லூ நடறதும் காரியம் பண்றதும் எதுக்குன்னு கேள்வி வந்திருக்கலாம். அம்மா செத்துப் போன துக்கத்துல என்னை அலட்சியப்படுத்தத் தோணும். எதுக்கு வரணும்னு இருந்திருக்கலாம். நான் கேட்கலை. வற்புறுத்தலை. அதே மாதிரி உன்னையும் வற்புறுத்த மாட்டேன். உன் முடிவு என்ன சொல்லு. என்ன பண்ணப் போறே...?''

''நான் என் இடத்துக்குப் போறேன்.''

''முரளி...''

''எங்கம்மாவோடேயே கொஞ்ச நாள் இருக்கேன்.''

''ஏம்பா?''

''என் வருத்தம் குறைய. அதைக் காரணம் காட்டி யாரையும் வருத்தப்பட வைக்கவும் வேண்டாம்.''

''வேலையை விடாதே முரளி.''

''பார்க்கலாம்.''

''உன் துணி மணி?''

''கொண்டு வந்து கொடுத்துடுங்கோ.''

''எப்பவாவது வருவியா? வந்து போயிண்டிருப்பியா?''

''பார்க்கலாம்.''

''அறுக்கறதுன்னு முடிவு பண்ணிட்டா அதையும் தெளிவாச் சொல்லிடு முரளி.''

''ஏன்?''

''என் பொண்ணுக்கு அவ சொச்ச காலத்துக்குப் பிடிப்பு தேட வேண்டாமா? பியானோவோ, புருஷனோ புதுசு வாங்க வேண்டாமா?'' சங்கரன் குரலில் கோபம் தெரிந்தது.



''இந்தக் கம்பெனியில திறமை இருக்கிறவங்களுக்குத்தான் வேலைன்னு முதலாளி சொல்லுவாரே, உனக்கு எப்படி வேலை கிடைச்சது?''
''எவ்வளவு லஞ்சம் கொடுக்க முடியும்னு என் திறமையைக் காட்டினேன்.'' — ராதா வாசுதேவன்.

# இரண்டு காப்பி-
# சிக்கரி கலவைகள்





**ஒரு சாதாரண**
**இன்ஸ்டன்ட் கலவை**
கலவை: 70% காப்பி 30% சிக்கரி

Nestlé
**ஸன்ரைஸ்**
கலவை: 80% காப்பி 20% சிக்கரி

# ஒன்றில் அதிக காப்பி

காப்பியும் சிக்கரியும் சரியான விகிதத்தில் கலப்பதைப் பொறுத்தே நல்ல இன்ஸ்டன்ட் காப்பி சிக்கரி அமைகிறது. சிக்கரி அதிகமானால் கசப்பாக இருக்கும். அதனால்தான் ஸன்ரைஸ் தரும் கூடுதல் காப்பி சுவையும் ஸ்ட்ராங்கும் உங்களுக்கு சிறப்பாகத் தெரிகிறது. ஏனெனில், ஸன்ரைஸில் காப்பியும் சிக்கரியும் 80:20 என்ற விகிதத்தில் கலந்திருக்கிறது. சாதாரண இன்ஸ்டன்ட் கலவைகளிலோ 70:30 என்ற விகிதம். அப்படியானால், ஒவ்வொரு கிராம் ஸன்ரைஸிலும் 14% கூடுதல் காப்பி, எனவே குறைந்த கசப்பு.

நாங்கள் சொல்வதை நம்புவதைவிட நீங்களே சுவைத்துப் பாருங்கள்.




**Nestlé**
# ஸன்ரைஸ்
**இன்ஸ்டன்ட் காப்பி-சிக்கரி கலவை**

# கூடுதலான காப்பி கலவை

HTA-5118B TAM



**மனைவி:** வாங்க, ஜவுளிக் கடைக்குப் போய் தீபாவளிக்குத் துணி எடுத்துக்கிட்டு வருவோம்...!

**கணவன்:** நீ மட்டும் போய்ட்டு வா... எங்க ஆபீஸில் ஒரு மாதம் லீவெல்லாம் தரமாட்டாங்க...!

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.

''சரி சொல்றேன்,'' முரளி தெருவோடு நடந்தான்.

''இனிமே நீ எனக்காக ஏதும் வாங்க வேண்டாம்ப்பா. ப்யானோ, புருஷன் எதுவானாலும் சரி நான் வாங்கிக்கறேன். நான் முடிவு செய்யறேன். நீ பேசாத இரு. புலம்பாம இரு. அது போதும்.''

''ரொம்ப சாதுவா இருக்கான். பிக்கல், பிடுங்கல் இல்லாத பிள்ளைன்னு நினைச்சேன்.''

''சரி, என்ன இப்போ?''

''இவ்வளவு மூர்க்கமா இருக்கானே?''

''உறவு என்னன்னு தெரியலே. கும்பலா சித்தப்பா, மாமா, மாமின்னு வாழலே. முரளி மட்டுமா? நானும் அப்படியில்லே. தனிச்சு என் புஸ்தகம், என் ப்யானோ, என் ரசனைன்னு வளர்ந்திருக்கேன். அதுவும் தனி. நானும் தனி. ஒட்டலே.''

''நான் தப்புப் பண்ணிட்டேனா?''

''நானும்தான்.''

''அவன் அம்மா வந்திருக்கலாம். வந்து இங்கே இருந்திருக்கலாம்.''

''அவளும் தனியா வளர்ந்திருக்கா. வாழ்க்கைப்பட்டு, விதவையாகித் தனியா இருந்திருக்கா. கூடிப் புழங்க அவளுக்கும் தெரியலே. மனுஷா பயமே போயிடுத்து. உப்போ, காரமோ தன் சோறு தன் வயிறுன்னு வாழ்ந்திருக்கா. முரளி, நான், மாமி மட்டுமில்லே. நிறையப் பேர் தனியாயிண்டு வரோம். நாம மட்டுமில்லே. ஒண்ணு போறும், ரெண்டு போறும்னு இதுகளையும் தனியா வளர்க்கப் போறோம். உறவு குறைவா, ஊர்ப்பழக்கம் குறைவா வளர்க்கப் போறோம்.''

''கூட்டுக் குடும்பம் பெஸ்ட்டுங்கறயா? அதுலயும் நிறைய வேதனைம்மா.''

''இல்லே இனிமே கூட்டுக் குடும்பம் சாத்தியமே இல்லே. இப்படித் தனியா இருக்க ஆரம்பிச்சுட்டா அதனோட விளைவைத் தாங்கிக்கற பக்குவம் வரணுமே தவிர, அதை விட்டுடக் கூடாதுங்கறேன். கூட இருந்தியா சரி.... பிரிஞ்சியா சரின்னு போகணும். பிரியவும் முடியலே. சேரவும் முடியலேன்னு புலம்பாத இருக்கணும். இது என்ன கஷ்டப்படப் போறதோ தெரியலே... எதிர்காலத்துல'' தூங்கும் குழந்தையைக் காட்டினாள்.

''ஒட்டாத புருஷன் மனைவிக்குப் பொறந்துட்டு இது யார்கிட்ட ஒட்டும்? யாரோட இழையும்?''

''கரெக்ட். இதுக்கு இப்பவே தயார் பண்ணிடணும். தனியாப் போய்ப் படுத்துக்கோ. அம்மா தட்டித் தூங்கப் பண்ண மாட்டா. தனியா போய்க் குளி. அம்மா துடைச்சு விட மாட்டான்னு சொல்லணும்.''

''எல்லாரும் பேசிக்கே போயிண்டிருக்கோம்,'' சங்கரன் நெட்டுயிர்த்தார்.

''இனிமே மேற்கோ, கிழக்கோ, வடக்கோன்னு இல்லேப்பா. ஒரே மாதிரி கல்ச்சர் ஒரே மாதிரி வாழ்க்கைன்னு வரப் போறது. ஒரே மாதிரி கிராப், ஒரே மாதிரி உடைன்னு வந்தாச்சு இல்லையா? உலகம் சுருங்க ஆரம்பிச்சுடுத்து. உலகம் ரொம்பப் பெரிசுன்னு பட்ட போது அவன் கையை நீ பிடிச்சுக்கோ. உன் கையை நான் பிடிச்சுக்கறேன்னு வரும். சின்னதாறது; அதனால, உன் இடத்துல நீ இரு. என் இடத்துல நான் இருக்கேன்னு விலகறோம்.''

''முரளி உன் பிள்ளை வேணும்னாவது வருவானா?''

''வரணும்னு நான் எதிர்பார்க்கலே. நானா பெத்து நானா வளர்ப்பேன். புருஷன் தோளைப் பிடிச்சுக்கணும்னு அவசியம் இல்லே.''

''உனக்கு இல்லே. அந்தப் புள்ளை கேட்டா? பிறந்த குழந்தை கேட்டா?''

''பார்ப்போம்.''

லலிதா குழந்தை பெற்ற போதும் முரளி வரவில்லே. வரச் சொல்லி யாரும் கூப்பிடவில்லே. தகவல் மட்டும் தெரிவிக்கப்பட்டது. பெரிய குழந்தையை மட்டும் ஒரு நாள் சங்கரன் அழைத்து வந்தார். முரளி கடற்கரைக்குக் கூட்டிப் போய் ஆடி விட்டுத் தானே கொண்டு போய் லலிதா வீட்டில் இறக்கி விட்டான். உள்ளே வரச் சொன்ன போது இன்னொரு முறை பார்ப்போம் என்று சொல்லி விட்டு வந்தான். முதல் குழந்தைக்குப் பள்ளியில் தகப்பனாக கையெழுத்திட்டான். டெல்லி போய் வயிற்றுப் போக்கோடு திரும்பி நாலு நாள் சலைன் ஏற்ற ஆஸ்பத்திரியில் சேர்ந்தான். லலிதா குழந்தைகளோடு வந்து பார்த்தாள். குழந்தை மாறி மாறி அம்மாவையும் அப்பாவையும் அடிக்கடி பார்த்தது. அப்பா அம்மா சத்தி சண்டை போட்டுக் கொள்ளவில்லே. ஆயினும் சண்டையா என்று கேட்டது. ஏதோ சொல்லி வாயடைத்தார்கள். மறுபடி டில்லி போனபோது குழந்தைகளுக்கு நிறைய பொம்மைகளும் துணிகளும் வாங்கினான். கவனமாய் லலிதாவுக்கு ஏதும் வாங்காமல் தவிர்த்தான். கொண்டு போய்க்

கொடுத்தான்.

"நீங்க அப்பாவை ஆஸ்பத்திரியில வந்து பார்த்தீங்களோன்னு அதுக்கு 'தேங்க்ஸ்'" என்று பொம்மைகளைக் குழந்தைகளிடம் நீட்டினான். லலிதா சிரித்தாள்.

குழந்தைகளுக்கு அப்பாவும் பிடித்துவிட்டது. அந்த வீட்டுக்கும் இந்த வீட்டுக்கும் ஒடிற்று. சைக்கிள் ரிக்ஷாவில் ஏற்றி விட்டால் இரண்டும் தனியே போய் அப்பா வீட்டு வாசலில் இறங்கின. சனியும் ஞாயிறும் அங்கேயே குளித்தன, சாப்பிட்டன. சந்து வீட்டுக் குழந்தைகளோடு பாண்டி ஆடின. அம்மாவிடம் உட்கார்ந்து ப்யானோ கேட்டன. 'அஞ்சனை நந்தனம் வீரம்' என்று அப்பாவோடு கோவிலுக்குப் போய் வந்தன. 'லண்டன் பிரிட்ஜ் உடைகிறது' என்று அம்மாவோடு பாட்டுப் பாடி ரைம்ஸ் கூவின. கரண்டியில் சூப் குடிக்கவும் கைகுவித்து மோர் குடிக்கவும் கற்றன.

"உனக்கும் அம்மாவுக்கும் சண்டையா?"

"இல்லையே? ஏன் கேட்கறே? நேத்து கூட போன்ல பேசினேனே...?"

"அப்ப ஏன் இங்கே ஒரு வீடு அங்கே ஒரு வீடு இருக்கு?"

"ஒரு வசதிதான். நீ உன் அம்மாவோட இருக்கிற மாதிரி, நான் என் அம்மாவோட இருக்கேன். இது யார் சொல்லு." படத்தைக் காட்டினான்.

"இது அப்பாவோட அம்மா."

"வெரிகுட்..."

"பொய் சொல்லாதப்பா. உனக்கும் அம்மாவுக்கும் சண்டை."

"இல்லேடா."

"ஜி. எம் மாமாவும் தாத்தாவும் பேசினா."

"பொய். நாளைக்கு நான் அம்மாவோட பேசறேன். நீயே பாரேன்."

"வந்து சாப்பிடணும். எங்களோட படுத்துக்கணும். அங்கேயே கதை சொல்லணும். அடுத்த வீட்டு மாமி அம்மாவைச் சண்டாளின்னு திட்டறபோது நீ வந்து அந்த மாமியை அடிக்கணும்."

சமனப்படுத்தினான். பத்து வயது வரை பொய் சொன்னான். பதினொரு வயதில் கேட்ட போது 'அம்மாவோட எனக்குச் சின்ன சண்டை. ஆனாலும் பேசுவோம்' என்றான். பன்னிரண்டு வயதில் அந்தக் குழந்தைக்குப் புரிந்துவிட்டது. கேட்பதை நிறுத்தி விட்டு உற்றுப் பார்த்தது.

"அப்பா நான் பியானோ கத்துக்கட்டுமா? பர்மிஷன் தருவியா?"

"வொய் நாட்?"

"உனக்குப் பியானோ பிடிக்குமா?"

"ம்ம்."

"அப்ப ஏன் அம்மாவோடத போட்டு உடைச்சே?" வாய் கேட்டதை விடக் கண்ணிலிருந்து வந்த கேள்வி இன்னும் கூர்மையாய் இருந்தது.

இரவு முழுவதும் யோசித்தான். "லலிதா, சைலன்ட் டைவோர்ஸ்னா என்னன்னு தெரியுமா? நான் ஸ்நேகிதம் பேசின மாதிரி, எதிர் எதிர் வீட் மாதிரி வாழ முடியுமா? கேட்ட கேள்விக்குப் பதில் சொல்லி, அத்து மீறாத நாகரிகத்தோட ஒண்ணா இருக்க முடியுமா?"

"உங்களால முடியுமா?"

"முடியும்." முடிந்தது. யுத்தம் முடிந்து விட்டது. பலர் நன்மை கருதி, நாகரிகமாய் ஒப்பந்தம் நடந்து விட்டது. கௌரவங்கள் மட்டும் எதிரும் புதிருமாய் நின்றன.

மனிதனுடைய கௌரவம் அவன் நிழல் மாதிரி. தினசரி வாழ்க்கையின் வெளிச்சம், நடைமுறை, அவன் மீது பட்டு ஒரு கௌரவ நிழலை அவனுக்குத் தரும். அவனோடு பிரியாது வரும். அந்த நிழல் மனிதனில்லை. அதற்கு வலியில்லை. அது உயிரில்லை. ஆனால் அது கூடவே வரும். தனியே இருட்டில் கௌரவம் ஏதுமில்லை. நாலு பேர் கண் வெளிச்சம் பட, பின்னால் குடைகாத்து நிற்கும். லலிதாவும் முரளியும் ஒன்றாய் இருந்தார்கள். நிழல்கள் மட்டும் தொடர்ந்து யுத்தம் செய்தன.

(முற்றும்)

---

'உங்களிடம் துணி துவைக்கும் இயந்திரம் (Washing Machine) இருக்கிறதா? அப்படியானால் பின்வரும் தொலைபேசி எண்ணுடன் தொடர்பு கொள்ளுங்கள். உங்களுக்குப் பெரிய ஆச்சரியம் காத்திருக்கிறது.'

இப்படி ஒரு விளம்பரம் பம்பாய் தினசரிகளில் போன மாதம் வெளிவந்தது.

உடனே பலர் அந்தத் தொலைபேசி எண்ணுக்கு டெலிபோன் செய்தார்கள். மறுமுனையில் வாஷிங் மெஷின் வைத்திருப்பவர்களின் விலாசத்தைக் கேட்டுக் குறித்துக் கொண்டார்கள்.

இரண்டு நாட்களுக்குப் பிறகு ஃபோன் செய்தவர்களின் வீட்டுக்கு ஒருவர் வந்து வாஷிங் மெஷினுக்கென்று பிரத்தியேகமாகத் தயாரித்த சோப் பவுடரின் சாம்பிள் பாக்கெட்டும் பிரபல பாடகர் ஒருவர் பாடிய 'கஜல்' இசை பதிவான 'காசட்' ஒன்றும் இனாமாகக் கொடுத்து விட்டுச் சென்றார்.

டாடா கம்பெனி தங்கள் புதுத் தயாரிப்பான ஒரு சோப் பவுடருக்குக் கையாண்ட விளம்பர உத்திதான் இது!

— செம்பூர் சந்துரு





# DUGAR INVESTMENTS LIMITED

Regd. Office : No. 805, Mount Road, (Opp. LIC Bldg.) P.B. 3733, Madras – 600 002. Phone : 87888, 812854

## INVITES PUBLIC DEPOSITS

### GOLDEN CERTIFICATES

| Period | Amount | Certificate Value | Annual Yield |
|---|---|---|---|
| 36 Months | Rs. 3,286 /- | Rs. 5,000/- | 17.38% |

Amounts will be accepted in multiples of Rs. 3,286/- and Certificates will be issued in multiples of Rs. 5,000/-

### FIXED DEPOSIT

INTEREST PAID MONTHLY

| Period | 6 months | 1 year | 2 & 3 years |
|---|---|---|---|
| Rate of interest per annum | 13% | 13½% | 14% |

### CUMULATIVE DEPOSIT

| Amount | Period | Maturity Value | For every additional sum of Rs. 1,000/- | Annual Yield |
|---|---|---|---|---|
| Rs. 3,000/- | 6 Months | Rs. 3,201/- | Rs. 1,067/- | 13.4% |
| | 1 Year | Rs. 3,450/- | Rs. 1,150/- | 15% |
| | 2 Years | Rs. 3,966/- | Rs. 1,322/- | 16.1% |
| | 3 Years | Rs. 4,563/- | Rs. 1,521/- | 17.36% |

Deposits are accepted in multiples of Rs 1,000/- with a minimum of Rs 3,000/-

### HIGHLIGHTS

1. The schemes are as per the directives of Reserve Bank of India.
2. Deposits are also accepted from the Non-Resident Indians on non-repatriation basis.
3. Interest at 14% p.a. for Shareholders, Employees and Charitable Institutions irrespective of the period.

f & g Profits of the Company before and after making provision for Tax and Dividends declared by the Company for the three financial years immediately preceding the date of advertisement

| Year ended | Profit before provision for tax | Profit after provision for tax | Dividend declared |
|---|---|---|---|
| | (Rs in lakhs) | (Rs in lakhs) | |
| 31 12 1984 | 11 16 | 11 16 | 25% |
| 31 12 1985 | 12 23 | 12 23 | 25% |
| 31 12 1986 | 21 28 | 21 28 | 25% |

h) Summarised financial position of the Company as appearing in the two latest Audited Balance Sheets

| LIABILITIES | 31-12-1986 | 31-12-1985 | ASSETS | 31-12-1986 | 31-12-1985 |
|---|---|---|---|---|---|
| | (Rs in lakhs) | | | (Rs in lakhs) | |
| Share Capital | 60.00 | 40.00 | Fixed Assets | 161.97 | 83.36 |
| Reserve & Surplus | 23.80 | 16.27 | Current Assets | 607.97 | 410.07 |
| Secured Loans | 363.48 | 242.93 | Loans & Advances | 47.86 | 37.67 |
| Unsecured Loans | 214.62 | 156.54 | | | |
| Current Liabilities & Provisions | 155.90 | 75.36 | | | |
| | 817.80 | 531.10 | | 817.80 | 531.10 |

| i) Contingent Liabilities | 1986 | 1985 |
|---|---|---|
| | (Rs in lakhs) | |
| a) Estimated amount of contracts remaining to be executed on capital account and not provided for | 14 60 | 13 50 |
| b) Counter guarantee to Bankers | 3 00 | NIL |
| The Company can raise by way of deposits under the directions | Rs 838 00 Lakhs | |
| Aggregate of deposits actually held as on 31-12-1986 | Rs 214 62 Lakhs | |

j) The Company has no overdue deposits other than unclaimed deposits

k) The Company hereby declares :

i) that the Company has complied with the applicable provisions of the directions of Reserve Bank of India

ii) that the compliance with the directions does not imply that the repayment of deposits is guaranteed by the Reserve Bank of India and

4. **For a single deposit of Rs. 25,000/- and above, interest at 14% per annum, will be paid, even for one year deposits.**
5. **INTEREST IS PAID MONTHLY irrespective of amount or period of deposit. COMPUTERISED POST DATED INTEREST WARRANTS for the entire period of the deposit will be issued along with the Fixed Deposit Receipt.**
6. **Interest is payable at par at all Branches of STATE BANK OF INDIA in India.**
7. **Interest will be calculated from the date of tendering the draft/cheque along with the application at the Company's offices or to the Managers/Brokers to the Scheme.**
8. **Deposits are accepted even for a short duration of 6 months.**
9. **No deduction of Income Tax at source, if the interest payable is less than Rs. 2,500/- in any financial year.**
10. **No deduction of Income tax at source, if declaration is furnished in Form No. 15-H even though the interest is over Rs. 2,500/-**

Particulars required to be specified as per Non-Banking Financial Companies and Miscellaneous Non-Banking Companies (Advertisement) Rules, 1977

a) Name of the Company : Dugar Investments Limited
b) Date of Incorporation : 20th May, 1981
c) Business : Hire Purchase on Motor Vehicles, Equipment Leasing and Public Deposits
Branches : Bangalore, Coimbatore, Delhi, Ernakulam, Gudur, Nellore, Pondicherry, Secunderabad, Tirunelveli, Vijayawada and Visakhapatnam
d) Management : The Company is managed by its Managing Director under the supervision of the Board.
e) Names, Address and Occupation of the Directors :

| | NAME | ADDRESS | OCCUPATION |
|---|---|---|---|
| 1 | Dr. C. Anna Rao (Chairman) | Chelikani Anna Rao Road, Sripuram Colony, Tirupati 517 507. A.P. | Former Chairman, Board of Trustees, Tirumala Tirupati Devasthanams |
| 2 | Shri B. Lalchand Marlecha (Vice-Chairman) | 30, Mannarswami Koil Street, Royapuram, Madras - 600 013. | Merchant & Banker |
| 3 | Shri N. Narayan Rao | 'Sree Nilayam', 1-7-54/B Sarojini Devi Road, Secunderabad - 500 003. A.P. | Company Director |
| 4 | Shri C.R. Rao | 'White House' Gudur - 524 101. A.P. | Company Director |
| 5 | Shri V. Ramachandran | 24, Nungambakkam High Road, Madras - 600 034 | Advocate |
| 6 | Shri C.V. Krishnaiah | 'Sree Krupa' Nehru Nagar Gudur - 524 101. A.P. | Mine Owner and Company Director |
| 7 | Shri R. Ramakrishnan | 'Hari', 14 Seethamma Road, Madras - 600 018 | Former Member Rajya Sabha |
| 8 | Shri M.K. Panduranga Setty | 'Prashanthi' 27, Bull Temple Road, Bangalore - 560 004 | Industrialist & Company Director |
| 9 | Shri K.S.T. Pani | 'Suseelam' 45, Mandapam Road, Kilpauk, Madras - 600 010 | Chief General Manager (Retd) State Bank of India & Company Director |
| 10 | Shri N. Mohaveerchand Dugar, Joint Managing Director | 'Dugar House' 7, Peddu Naicken Street, Kondithope Madras - 600 079 | Banker and Mine Owner |
| 11 | Shri N. Tarachand Dugar Managing Director | 21, Commander-in-Chief Road, Madras - 600 105 | Industrialist and Banker |

iii) that the deposits accepted by the Company will be unsecured and rank pari-passu with other unsecured liabilities.

By Order of the Board
**for DUGAR INVESTMENTS LIMITED**
N. TARACHAND DUGAR
Managing Director

Madras
29-5-1987

This advertisement is issued on the authority and in the name of Board of Directors of the Company. The text was approved by the Board of Directors on 29.5.1987 and a copy duly signed by a majority of the Directors has been filed with the Regional Office of Reserve Bank of India, Department of Financial Companies, Bangalore.

**Details and application forms can be had from any of the following Offices of the Company and Managers, Principal Brokers to the Fixed Deposit Schemes and other leading Brokers.**

| | |
|---|---|
| **MADRAS** | Regd. Office : 805, Mount Road (Opp. LIC Bldg), P.B. No. 3733, Madras - 600 002 Tel : 87888 and 812854 |
| **BANGALORE** | 'BLU MOON COMPLEX', 2nd Floor, 67, M.G. Road, Bangalore - 560 001. Tel : 565444 |
| **COIMBATORE** | 'FATEMA MANZIL', 9/253, 2nd Floor, Dr. Nanjappa Road, Gandhipuram, Coimbatore - 641 018 |
| **DELHI** | 108/3, Mali Bazar, Chandni Chowk, Delhi - 110 006 Tel : 269904/266681 |
| **ERNAKULAM** | 'SUDAN BUILDING', 2nd floor, 900-A, M.G. Road, Ernakulam, Cochin - 682 011 Tel : 369515 |
| **GUDUR** | 'DUGAR HOUSE', 8/85 Raja Street, Gudur - 524 101. A.P. Tel : 330 |
| **NELLORE** | 17/115, Trunk Road, Nellore - 524 001. Tel : 6266 |
| **PONDICHERRY** | 37-B, Jawaharlal Nehru Street, Pondicherry - 605 001. Tel : 6808 |
| **SECUNDERABAD** | 'AISHWARYA BUILDING', 1st Floor, 126 M.G. Road, Secunderabad - 500 003 Tel : 72029 |
| **TIRUNELVELI** | 162, West Car Street, Tirunelveli Town - 627 006. Tel : 24599 |
| **VIJAYAWADA** | 40-1-42B, Bandar Road, 1st Floor, Labbipet, Vijayawada - 520 010 Tel : 65668 |
| **VISAKHAPATNAM** | 28-2-52/1, 1st Floor, Main Road, Jagadamba Junction, Visakhapatnam - 530 020 Tel : 69626 |

## MANAGERS TO THE DEPOSIT SCHEME

**M/S. J.M. FINANCIAL & INVESTMENT CONSULTANCY SERVICES PVT LTD.**, 141 Maker Chambers III (13th Floor) Nariman Point, Bombay - 400 021 and its Branches at Ahmedabad, Bangalore, Baroda, Calcutta, Cochin, Goa, Hyderabad, Jaipur, Madras, New Delhi, Pune and Surat

**M/S MADAN & CO. LTD.**, 'MADAN HOUSE', 7 Ramanuja Iyer Street, Madras - 600 079 Phone 37508, 34853 and 31449. SAKTHI TOWERS, 1st Floor, Second Tower, F. 766, Anna Salai, Madras - 600 002 and its Branches at Coimbatore, Hyderabad, New Delhi and Visakhapatnam

### PRINCIPAL BROKERS

**M/s ALPHA FINANCIAL CONSULTANCY SERVICES**, 'KAMALA ARCADE', 669, Mount Road, Thousand Lights, Madras - 600 006 and its offices at Bangalore and Hyderabad. **M/s INTEGRATED ENTERPRISES**, No. 36 Pachaiyappa Mudali Street, Kumbakonam - 612 001 and its offices at Bangalore, Bombay, Coimbatore, Hyderabad, Madras, Madurai & Tiruchirapalli. **M/s UNIVERSAL FINANCE TRADERS LIMITED**, CONTINENTAL CHAMBERS, 142 Ground Floor, Nungambakkam High Road, Madras - 600 034. 157 Linghi Chetty Street, 1st Floor, Madras - 600 001 and their offices at Bombay, Calcutta and New Delhi. **M/s ARKAY INVESTMENT AND CONSULTANCY SERVICES**, Regd. Office : 23 Rameswaram Road, T. Nagar, Madras - 600 017. Branch Office : Nataraja Building, Room No. 4 (3rd floor), 21 Second Line Beach, Madras - 600 001. **M/s M.R.K. CONSULTANCY SERVICES**, 'KANKARIA BHAVAN', No. 12, Kalathipillai Street (1st Floor) Sowcarpet, Madras - 600 079

EXELADS/D1/480A/87

# பொன்னியின்

## அத்தியாயம் 20
## ...ரு பெண் புலிகள்



ற்றனைப் பிடித்துக் கட்டி வீதியில் கொண்டு வருகிறார்கள் என்ற செய்தியைத் தாதி ஓடி வந்து தெரிவித்ததும், அங்கிருந்த மூவரின் உள்ளங்களும் பரபரப்பை அடைந்தன. குந்தவையின் உள்ளம் அதிகமாகத் தத்தளித்தது.

"தேவி! நாம் போய் அந்தக் கெட்டிக்கார ஒற்றன் முகம் எப்படியிருக்கிறது என்று பார்க்கலாமா?" என்றாள் நந்தினி.

குந்தவை தயக்கத்துடன், "நமக்கென்ன அவனைப் பற்றி?" என்றாள்.

"அப்படியானால் சரி!" என்று நந்தினி அசட்டையாய்க் கூறினாள்.

"நான் போய்ப் பார்த்து வருகிறேன்" என்று கந்தமாறன் தட்டுத் தடுமாறி எழுந்தான்.

"வேண்டாம்; உம்மால் நடக்க முடியாது; விழுந்து விடுவீர்!" என்றாள் நந்தினி.

குந்தவை மனத்தை மாற்றிக் கொண்டவள்போல், "இவருடைய அருமையான சிநேகிதன் எப்படியிருக்கிறான் என்று நாமும் பார்த்துத்தான் வைக்கலாமே! இந்த அரண்மனை மேன் மாடத்திலிருந்து பார்த்தால் தெரியுமல்லவா?" என்று கேட்டாள்.

"நன்றாய்த் தெரியும்; என்னுடன் வாருங்கள்!" என்று நந்தினி எழுந்து நடந்தாள்.

கந்தமாறன், "தேவி! அவன் என் சிநேகிதனாயிருந்தால், மாமாவிடம் சொல்லி, நான் அவனைச் சந்தித்துப் பேச ஏற்பாடு செய்ய வேண்டும்!" என்று சொன்னான்.

"அவன் உமது சிநேகிதன் தானா என்று எங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றாள் நந்தினி.

"அப்படியானால் நானும் வந்தே

மணியம்.

# செல்வன்

அமரர் கல்கி

திருவேன்!'' என்று கந்தமாறன் தட்டுத் தடுமாறி நடந்தான்.

மூவரும் அரண்மனை மேன் மாடத்தின் முன் முகப்புக்குச் சென்றார்கள். சற்றுத் தூரத்தில் ஏழெட்டுக் குதிரைகள் வந்து கொண்டிருந்தன. அவற்றின்மீது வேல் பிடித்த வீரர்கள் வந்து கொண்டிருந்தார்கள். குதிரைகளுக்கு மத்தியில் ஒரு மனிதன் நடந்து வந்தான். அவன் கைகளை முதுகுடன் சேர்த்துக் கயிற்றினால் கட்டியிருந்தது. அந்தக் கயிற்றின் இரு முனைகளை இரு பக்கத்திலும் வந்த குதிரை வீரர்கள் பிடித்துக் கொண்டிருந்தார்கள்.

வீரர்களுக்குச் சற்றுத் தூரத்தில் வேடிக்கை பார்க்கும் கும்பல் வந்து கொண்டிருந்தது.

அரண்மனை மாடத்திலிருந்து பார்த்தவர்களுக்குக் குதிரைகளுக்கு நடுவில் நடந்து வந்த மனிதனின் முகம் முதலில் தெரியவில்லை.

ஊர்வலம் அருகில் வரும் வரையில் அந்த அரண்மனை மேன் மாடத்தில் மௌனம் குடிகொண்டிருந்தது.

குந்தவையின் ஆவலும் கவலையும் ததும்பிய கண்கள் நெருங்கி வந்த ஊர்வலத்தின் மீது லயித்திருந்தன.

நந்தினியோ வீதியில் எட்டிப் பார்ப்பதும் உடனே குந்தவையின் முகத்தைப் பார்ப்பதுமாயிருந்தாள்.

கந்தமாறன் அங்கே குடிகொண்டிருந்த மோனத்தைக் கலைத்தான்.

''இல்லை; இவன் வந்தியத்தேவன் இல்லை!'' என்றான்.

குந்தவையின் முகம் மலர்ந்தது.

அச்சமயம் அந்த விநோதமான ஊர்வலம் அரண்மனை மாடத்தின் அடிப்பக்கம் வந்திருந்தது.

கயிற்றினால் கட்டுண்டு குதிரை வீரர்களின் மத்தியில் நடந்து வந்தவன் அண்ணாந்து பார்த்தான்.

வைத்தியர் மகன் அவன் என்பதைக் குந்தவை தெரிந்து கொண்டாள்.

அண்ணாந்து பார்த்தவன் ஏதோ சொல்ல எண்ணியவனைப் போல் வாயைத் திறந்தான்.

அதற்குள் அவனை இரு புறமும் பிணைத்திருந்த கயிறு முன்னால் தள்ளிக் கொண்டு போய்விட்டது.

குந்தவை தன் மகிழ்ச்சியை வெளியிட்டுக் கொள்ளாமல் ''இது என்ன பைத்தியக்காரத்தனம்? இவனை எதற்காகப் பிடித்து இழுத்து வருகிறார்கள்? இவன் பழையாறை வைத்தியர் மகன் அல்லவா?'' என்றாள்.

''ஓ! அப்படியா? என் மைத்துனரின் ஆட்கள் எப்போதும் இப்படித்தான். உண்மைக் குற்றவாளியை விட்டுவிட்டு யாரையாவது பிடித்துக் கொண்டு வந்து தொந்தரவு செய்வார்கள்!'' என்றாள் நந்தினி.

இதற்குள் கந்தமாறன் ''வந்தியத்தேவன் இவர்களிடம் அவ்வளவு இலகுவில் அகப்பட்டுக் கொள்வானா? என் சிநேகிதன் பெரிய இந்திரஜித்தனாயிற்றே? என்னையே ஏமாற்றியவன் இந்த ஆட்களிடமா சிக்கிக் கொள்வான்?'' என்றான்.

''இன்னமும் அவனை உம்முடைய சிநேகிதன் என்று சொல்லிக் கொள்கிறீரே!'' என்றாள் நந்தினி.

''துரோகியாய்ப் போய் விட்டான். ஆனாலும் என் மனத்தில் அவன் பேரில் உள்ள பிரியம் மாறவில்லை!'' என்றான் கந்தமாறன்.

''ஒருவேளை உம்முடைய அழகான சிநேகிதனை இவர்கள் கொன்று போட்டிருக்கலாம். இரண்டு ஒற்றர்களைத் தொடர்ந்து கோடிக்கரைக்கு இந்த வீரர்கள் போனதாகக் கேள்விப்பட்டேன்'' என்று நந்தினி சொல்லிவிட்டு, குந்தவையின் முகத்தைப் பார்த்தாள். "கொன்றிருக்கலாம்" என்ற வார்த்தை

குந்தவையைத் துடி துடிக்கச் செய்தது என்பதை அறிந்து கொண்டாள்.

**அடி கர்வக்காரி! உன் பேரில் பழி வாங்க நல்ல ஆயுதம் கிடைத்தது! அதைப் பூரணமாக உபயோகப்படுத்தாமற் போனால் நான் பழுவூர் இளைய ராணி அல்ல! பொறு! பொறு!**

குந்தவை தன் உள்ளக் கலக்கத்தைக் கோபமாக மாற்றிக் கொண்டு, "ஒற்றர்களாவது ஒற்றர்கள்! வெறும் அசட்டுத்தனம்! வர வர இந்தக் கிழவர்களுக்கு அறிவு மழுங்கிப் போய்விட்டது! யாரைக் கண்டாலும் சந்தேகம்! இந்த வைத்தியர் மகனை நான் அல்லவா கோடிக்கரைக்கு மூலிகை கொண்டு வருவதற்காக அனுப்பியிருந்தேன்? இவனை எதற்காகப் பிடித்து வந்திருக்கிறார்கள்? இப்போதே போய் உங்கள் மைத்துனரைக் கேட்கப்போகிறேன்!" என்றாள்.

"ஓகோ! தாங்கள் அனுப்பிய ஆளா இவன்? தேவி! சந்தேகம் என்று சொன்னீர்களே? எனக்குக்கூட இப்போது ஒரு சந்தேகம் தோன்றியிருக்கிறது. மூலிகை கொண்டு வருவதற்கு இவனை மட்டும் அனுப்பினீர்களா? இன்னொரு ஆளையும் சேர்த்து அனுப்பினீர்களா?" என்று நந்தினி கேட்டாள்.

"இவனோடு இன்னொருவனையும் தான் அனுப்பினேன்! இரண்டு பேரில் ஒருவனை இலங்கைத்தீவுக்குப் போகும்படி சொன்னேன்."

"ஆகா! இப்போது எனக்கு எல்லாம் புரிந்துவிட்டது! நான் சந்தேகித்தபடிதான் நடந்திருக்கிறது!"

"எனக்கு ஒன்றுமே புரியவில்லை. என்ன சந்தேகித்தீர்கள்? என்ன நடந்திருக்கிறது?"

"இனிச் சந்தேகமே இல்லை; உறுதி தான். தேவி! தாங்கள் இவனோடு சேர்த்து அனுப்பிய ஆள் ஏற்கெனவே உங்களுக்குத் தெரிந்தவனா? புதிய மனிதனா?"





ந்தவை சற்றுத் தயங்கி, "புது மனிதனாவது? பழைய மனிதனாவது? காஞ்சிபுரத்திலிருந்து ஓலை கொண்டு வந்தவன்; என் தமையனிடமிருந்து வந்தவன்" என்றாள்.

"அவனேதான்! அவனேதான்!"

"எவனேதான்?"

"அவன்தான் ஒற்றன்! சக்கரவர்த்திக்கு ஓலை கொண்டு வந்ததாகத்தான் இங்கேயும் அவன் சொன்னானாம்..."

"என்ன காரணத்தினால் அவனை ஒற்றன் என்று இவர்கள் சந்தேகித்தார்களாம்?"

"எனக்கென்ன தெரியும் அதைப் பற்றி? அதெல்லாம் புருஷர்கள் விஷயம்! பார்க்கப் போனால், அந்த ஒற்றனும் சந்தேகப் படும்படியாகத்தான் நடந்திருக்கிறான். இல்லாவிட்டால், இரகசியமாக இரவுக்கிரவே ஏன் தப்பி ஓட வேண்டும்? இந்தச் சாது மனிதருடைய முதுகிலே எதற்காகக் குத்திவிட்டுப் போக வேண்டும்?"

"இவருடைய முதுகில் அவன்தான் குத்தினான் என்பதையும் நான் நம்பவில்லை. குத்தியிருந்தால் இவரை மறுபடி தூக்கிக் கொண்டு போய் அந்த ஊமையின் வீட்டில் ஏன் சேர்த்து விட்டுப் போகிறான்?"

"கூட இருந்து பார்த்ததுபோல் சொல்கிறீர்களே, தேவி! என்னமோ அந்த ஒற்றன் பேரில் உங்களுக்கு அவ்வளவு பரிவு தோன்றியிருக்கிறது. அவனிடம் ஏதோ மாய சக்தி இருக்க வேண்டும். இவர்கூட அவனை இன்னும் தம் சிநேகிதன் என்று சொல்லிக் கொள்கிறார் அல்லவா? — எப்படியானால் என்ன? போன உயிர் திரும்பி வரப் போவதில்லை. அவனை இந்த வீரர்கள் கொன்றிருந்தால்..."

குந்தவையின் முகத்தில் வியர்வை துளித்தது. கண்கள் சிவந்தன. தொண்டை அடைத்தது. நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டது. "அப்படி நடந்திராது! ஒரு நாளும் நடந்திராது" என்று தனக்குள்ளே சொல்லிக் கொண்டாள்.

"இவர் சொல்கிறபடி அந்த ஒற்றன் அவ்வளவு கெட்டிக் காரனாயிருந்

தால்...'' என்றாள்.

''ஆம், இளவரசி! வந்தியத்தேவன் இந்த ஆட்களிடம் ஒருநாளும் அகப்பட்டுக் கொண்டிருக்க மாட்டான்!'' என்றான் கந்தமாறன்.

''இப்போது அகப்பட்டிரா விட்டால் இன்னொரு நாள் அகப்பட்டுக் கொள்கிறான்!'' என்றாள் நந்தினி.

குந்தவை பற்களைக் கடித்துக் கொண்டு, ''நாளை நடக்கப் போவது யாருக்குத் தெரியும்?'' என்றாள்.

பின்னர் ஆத்திரத்துடன், ''சக்கரவர்த்தி நோயாகப் படுத்தாலும் படுத்தார்; இராஜ்யமே தலை கீழாகப் போய் விட்டது! மூலிகை கொண்டு வருவதற்கென்று நான் அனுப்பிய ஆட்களைப் பிடிப்பதற்கு இவர்களுக்கு என்ன அதிகாரம்? இதோ என் தந்தையிடம் போய்க் கேட்டு விடுகிறேன்'' என்றாள்.

''தேவி! நோயினால் மெலிந்திருக்கும் சக்கரவர்த்தியை இது விஷயமாக ஏன் தொந்தரவு செய்ய வேண்டும்? என் மைத்துனரையே கேட்டு விடலாமே? தங்கள் விருப்பம் ஒரு வேளை அவருக்குத் தெரியாமலிருக்கலாம். தெரிவித்தால் அதன்படி நடந்துகொள்கிறார். இந்தச் சோழ ராஜ்யத்தில் இளைய பிராட்டியின் விருப்பத்துக்கு மாறாக நடக்க யார் துணிவார்கள்?'' என்றாள் நந்தினி.

அந்த இரண்டு பெண் புலிகளுக்கும் அன்று நடந்த போராட்டத்தில் நந்தினியே வெற்றி பெற்றாள். குந்தவையின் நெஞ்சில் பல காயங்கள் ஏற்பட்டன. அவற்றை வெளிக் காட்டாமலிருக்க இளவரசி பெரு முயற்சி செய்ய வேண்டியிருந்தது.

# அத்தியாயம் 21
# பாதாளச் சிறை



லக வாழ்க்கையைப் போல் அறிய முடியாதவிந்தைவேறொன்றுமில்லை. சுகம் எப்படி வருகிறது, துக்கம் எப்படி வருகிறது என்று யாரால் சொல்ல முடியும்? வானம் நெடுங்காலம் களங்கமற்று விளங்கி வருகிறது. திடீரென்று கருமேகங்கள் திரண்டு வந்து எட்டுத் திசைகளும் இருள் சூழ்ந்து இடிஇடித்து மின்னல் மின்னி மழைகொட்டு கொட்டு என்று கொட்டுகிறது. உலகிலிருந்து காற்று என்பதே அற்றுப் போய்விட்டதாகச் சில சமயம் தோன்றுகிறது. மரங்களின் இலைகளும் அசையாமலிருக்கின்றன. திடீரென்று எங்கிருந்தோ ஒரு சூறைக் காற்று வந்து சுழன்று சுழன்று அடிக்கிறது. அதன் வேகத்தில் பெரிய பெரிய மரங்கள் வேருடன் பெயர்ந்து விழுகின்றன. சற்று முன்னால் நேத்ரானந்தமாக வானளாவி நின்று காட்சியளித்த பசுமரச் சோலைகள் இப்போது அனுமார் அழித்த சோக வனமாக மாறி விடுகின்றன.

குந்தவையின் வாழ்க்கையில் அத்தகைய சூறைக் காற்று இப்போது சுழன்று அடித்துக் கொண்டிருந்தது. சில காலத்துக்கு முன்பு வரையில் அவள் கவலை என்பதை அறியாதவளாயிருந்தாள். வாழ்க்கை என்பது இடைவிடாத ஓர் ஆனந்த உற்சவமாக இருந்து வந்தது. அன்பும் ஆதரவும் ஆடலும் பாடலும் காவியமும் ஓவியமும் அணிபணியும் அலங்காரமும் உத்தியான வனமும் ஒய்யார ஓடமுமே வாழ்க்கை என்று எண்ணும்படியாக நாட்கள் சென்று கொண்டிருந்தன. தந்தையும் தாய்மார்களும் அண்ணனும் தம்பியும் அமைச்சர்களும் ஆசிரியர்களும் தாதிமார்களும் தோழிமார்களும் இளைய பிராட்டியைத் தங்கள் கண்ணின் கருமணியாகப் பாவித்து நடத்தி வந்தார்கள். துயரம் இன்னது என்பது காவியத்திலும் நாடகத்திலும் உள்ள கற்பனை மூலமாகவே அவளுக்குத் தெரிந்திருந்தது.

அத்தகைய பாக்கியசாலிக்குத் துன்பம் வரத் தொடங்கிய போது ஒன்றன் மேலொன்றாகத் தொடர்ந்து

வந்து மோதியது. தந்தையின் நிலை கவலைக்கிடமாயிருந்தது. இராஜ்யத்துக்குப் பெரிய சோதனை ஏற்பட்டிருந்தது. தமையனும் தம்பியும் தூர தேசங்களில் இருந்தார்கள். இன்னதென்று சொல்ல முடியாத ஒரு பெரும் விபத்து சோழர் குலத்துக்கு ஏற்படப்போவதாக சோதிடர்களும் நிமித்தக்காரர்களும் மர்மமாகச் சொல்லி வந்தார்கள். நாட்டில் இரகசியச் சதிக்கூட்டங்கள் நடந்து வந்தன. நாட்டின் மக்கள் இனந் தெரியாத பீதியில் ஆழ்ந்திருந்தார்கள்.

வைர நெஞ்சு படைத்த வீரர்கள் வழிவழியாக வந்த குலத்தில் பிறந்த குந்தவை இவ்வளவையும் தீரத்துடன் சமாளிக்கக் கூடிய மனோதைரியம் பெற்றிருந்தாள். குலத்துக்கும் இராஜ்யத்துக்கும் ஏற்பட்டிருந்த எல்லா அபாயங்களையும் தன் கூரிய மதியின் துணையினால் போக்கி விடலாம் என்ற திடமான நம்பிக்கை அவளுக்கு இருந்தது.

ஆனால், அவளுடைய வாழ்க்கையில் ஒரு சிறிய சம்பவம் — எதிர் பாராத ஒரு சந்திப்பு — அவளுடைய வைர இதயம் இளகவும் மனோதைரியம் குலையவும் காரணமாகி விட்டது.

வந்தியத்தேவனைக் குந்தவை சந்தித்தபோது, — அது வரையில் மொட்டாக இருந்த அவளுடைய இருதய தாமரை, — மடலவிழ்ந்து மலர்ந்தது.

ஆனால், என்ன துரதிர்ஷ்டம் — அதே சமயத்தில் ஒரு கரு வண்டு அந்த மலருக்குள் குடிபுகுந்து, — தன் விஷக் கொடுக்கினால் அதன் மெல்லிய இதழ்களைக் கொட்டத் தொடங்கியது! அம்மம்மா! என்ன வேதனை!


ந்த வாணர் குல வீரன் ஒரு வேளை சிறைப்பட்டிருக்கலாம் என்ற எண்ணம் எவ்வளவு வேதனையை அளித்தது? அவன் கொல்லப்பட்டிருக்கலாம்



என்ற கொடிய வார்த்தை எப்படி அவள் நெஞ்சைப்பிளந்தது? அதை வெளிக்காட்டிக் கொள்ளாமலிருக்க அவள் எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருந்தது?

பெற்றவர்கள், உற்றார்கள், உடன் பிறந்தவர்கள், உயிருக்குயிரான தோழிகள் எவ்வளவோ பேர் இருக்க, — எவனோ வழியோடு போகிறவனைப் பற்றி, — அகஸ்மாத்தாக இரண்டு மூன்று தடவை சந்தித்தவனைப் பற்றி ஏன் இந்த இருதயம் இப்படித் துடி துடிக்க வேண்டும்?

இதையெல்லாவற்றையும் யோசிப்பதற்கும், காரண காரியங்களை ஆராய்ந்து முடிவு கட்டுவதற்கும், இப்போது நேரமில்லை. மீனமேஷம் பாராமல், சகுனமும் சகுனத் தடையும் பாராமல், விசாரிக்க வேண்டியதை உடனே விசாரித்து, செய்ய வேண்டியதை உடனே செய்ய வேண்டும்...



ஆகவே அன்று பிற்பகலிலேயே இளைய பிராட்டி சின்னப் பழுவேட்டரையரின் மாளிகைக்கு வருவதாகச் சொல்லி அனுப்பிவிட்டுச் சென்றான். அந்த மாளிகையின் அந்தப்புர மாதர்கள் இளைய பிராட்டியை ஆர்வத்தோடு வரவேற்றார்கள். அன்பைச் சொரிந்து உபசரித்தார்கள். இளவரசி அவர்களுடன் அளவளாவிச் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்த பிறகு சித்திர மண்டபத்துக்குச் சென்றாள். அங்கே சின்னப் பழுவேட்டரையர் காத்திருந்து இளைய பிராட்டியை வரவேற்று, மண்டபத்தில் தீட்டியிருந்த சித்திரங்களை விளக்

மணியம்

கிக் கூற முற்பட்டார். குந்தவையும் பார்த்துக் கொண்டும் கேட்டுக் கொண்டும் வந்தாள்.

கடைசிச் சித்திரத் தண்டை வந்து நின்றதும், குந்தவை காலாந்தக கண்டரை ஏறிட்டுப் பார்த்து, "ஐயா! பழுவேட்டரையர்கள் பரம்பரையாகச் சோழ குலத்துக்கு ஒப்பற்ற சேவை புரிந்து வந்திருக்கிறார்கள்!" என்றாள்.

"அம்மையே! அது எங்கள் பாக்கியம்" என்றார் காலாந்தக கண்டர்.

"அந்த சேவைக்கெல்லாம் ஈடாகக் கூடியது இந்தச் சோழ சாம்ராஜ்யந்தான் என்பதில் சந்தேகமில்லை....."

"தாயே! இது என்ன வார்த்தை?"

"ஆனாலும்சக்கரவர்த்தியின் ஆயுட்காலம் முடிந்து கைலாச பதவியை அடையும் வரையில் தாங்கள் காத்திருக்கலாம் அல்லவா? சாம்ராஜ்ய அதிகாரங்களைக் கைப்பற்றுவதற்கு இவ்வளவு அவசரப்பட வேண்டுமா?"

இந்தவார்த்தைகள் காலாந்தககண்டரின் இருதயத்தில் கூரிய அம்புகளைப் போல் பாய்ந்தன என்பதை அவருடைய முகம் காட்டியது. அவரது நெற்றியில் வியர்வைத் துளிகள் துளித்து நின்றன. மீசை துடிதுடித்தது. கை கால்கள் வெடவெடத்து ஆடின.

காலாந்தக கண்டர் நெற்றி வியர்வையைத் துடைத்துக் கொண்டு குந்தவையைப்பார்த்து, "அம்மையே! இது என்ன இவ்வளவு உக்கிரம்? சொல்லம்பினாலேயே என்னை யமலோகத்துக்கு அனுப்பி விடுவதென்று உத்தேசமா ......?" என்றார்.

"ஐயா! அத்தகைய சக்தி என்னிடம் இல்லை என்பது தங்களுக்கே தெரியும். காலாந்தகரிடம் அணுக யமனே பயப்படுவானே? என் போன்ற பேதைப் பெண்ணால் அது முடியுமா?"

"அம்மணி! இத்தகைய கொடிய வார்த்தைகளைச் சொல்வதைக் காட்டிலும் பழுக்கக் காய்ச்சிய ஈயத்தை என் காதில் தாங்கள் ஊற்றலாம்! தேவி இவ்வளவு மறக் கருணை காட்டும்படி



அடியேன் என்ன தவறு செய்தேன்?"

"தங்கள் தவறைப் பற்றிச் சொல்ல நான் யார்? என்னுடைய தவறு இன்னது என்பதைத்தான் தாங்கள் சொல்ல வேண்டும். என் தந்தையின் நோயைத் தீர்ப்பதற்கு மூலிகை கொண்டுவருவதற்காக ஆள் அனுப்பியது என்பேரில் தவறா?"

"இல்லை, அம்மணி, அது ஒருநாளும் தவறாகாது."

"பழையாறை வைத்தியர் மகனைக் கோடிக் கரைக்கு மூலிகை கொண்டு வருவதற்காக நான் அனுப்பினேன் என்பது தங்களுக்குத் தெரியுமா?"

"தெரியும், அம்மணி!"

"இன்றைய தினம் அந்த வைத்தியர் மகனைக் கயிற்றால் கட்டி வீதியில் உம் குதிரை வீரர்கள் இழுத்துக் கொண்டு வந்ததைப் பார்த்தேன். கட்டளையிட்டது தாங்கள்தானே? அவனை அனுப்பியவள் நான் என்று தெரிந்து தானே இந்த ஏற்பாடு செய்தீர்?"

"ஆம், பிராட்டி! ஆனால் அவன் ஒற்றன் என்பது தெரியாமல் தாங்கள் அனுப்பியிருக்கலாம் அல்லவா?"

"பழையாறை வைத்தியர் மகனாவது? ஒற்றனாவது? அந்தக் கதையை




என்னை நம்பச் சொல்கிறீரா?''

''தாயே! அவனே ஒப்புக் கொண்டிருந்தால் நம்ப வேண்டியதுதானே?''

இளவரசி சிறிது திடுக்கிட்டு, ''அவனே ஒப்புக் கொண்டானா? அது எப்படி? என்னத்தை ஒப்புக் கொண்டான்?'' என்று கேட்டாள்.

''தன்னோடு வந்த இன்னொருவன் ஒற்றன் என்று இவன் ஒப்புக் கொண்டான். அந்த இன்னொருவன் மூலிகைக்காக உண்மையில் பிரயாணம் புறப்படவில்லையென்றும், இலங்கையில் யாருக்கோ கடிதம் கொண்டு சென்றதாகவும் இவன் ஒப்புக் கொண்டான்...''

''இவன் பெரிய மூடன்; ஏதாவது உளறியிருப்பான். இவனுடன் சென்ற இன்னொரு ஆளையும் அனுப்பியவள் நான்தான். அது தங்களுக்குத் தெரியும் அல்லவா?''

''தெரியும், தாயே! ஆனால் தங்களை அந்த மனிதன் ஏமாற்றி விட்டான் என்பதும் தெரியும். வந்தியத்தேவன் என்னும் பெயருடைய அவ்வாலிபன் உண்மையில் ஓர் ஒற்றன்தான்...''

''இல்லவே இல்லை. அவன் காஞ்சிபுரத்திலிருந்து என் தமையன் எழுதிய ஓலையைக் கொண்டு வந்தவன்.''

''இளவரசி! அவன் சக்கரவர்த்திக்கும் இளவரசரிடமிருந்து ஓலை கொண்டு வந்தான். அதனால் என்ன? ஒற்றர்கள் இப்படி ஏதாவது ஓர் உபாயத்தைக் கடைப் பிடித்துத் தானே தங்கள் வேலையைச் செய்யவேண்டும்?''

''ஐயா! வந்தியத்தேவன் ஒற்றன் என்பதற்கு ருசு என்ன?''

''அவன் ஒற்றன் இல்லாவிட்டால் இராஜபாட்டையில் நடப்பதை விட்டுக் குறுக்கு வழியில் நடப்பானேன்? குடந்தை ஜோதிடரிடம் போய்ச் சக்கரவர்த்தியின் ஜாதக பலனைப் பற்றிக் கேட்பானேன்?''

''சக்கரவர்த்தியின் ஜாதகத்தைப் பற்றி நான் கூடக் குடந்தை ஜோதிடரிடம் கேட்டேன். அதனால் என்ன?''

''சக்கரவர்த்தியின் செல்வப் புதல்வியாகிய தாங்கள் கேட்பது வேறு. சம்பந்தமில்லாத யாரோ வழிப்போக்கன் கேட்பது வேறு. பகையரசரின் ஒற்றனாயிருந்தால்தான் அப்படி விசாரிக்கத் தோன்றும்.''

''இது தங்கள் ஊகம். வேறு காரணம் உண்டா?''

''பகிரங்கமாக என்னுடைய அனுமதி கேட்டுப் பெற்றுக் கொண்டு தஞ்சைக் கோட்டைக்குள் வந்திருக்கலாம். அப்படிச் செய்யாமல் பழுவூர் முத்திரை மோதிரத்தைக் காட்டி விட்டு ஏன் நுழைய வேண்டும்? பெரிய பழுவேட்டரையர் கொடுத்தார் என்று ஏன் பொய் சொல்ல வேண்டும்?''

''முத்திரை மோதிரம் பின்னே யார் கொடுத்தார்களாம்!''

''அது இன்னும் தெரியவில்லை. கண்டு பிடிக்க வேண்டும்.''

''அதைக் கண்டு பிடிக்க முடியாமல் உங்கள் ஆட்கள் என்ன செய்தார்கள்?''

''அம்மணி, என்னுடைய ஆட்கள் மந்திரவாதிகள் அல்ல. ஒற்றனைக் கண்டு பிடித்துக் கேட்டுத்தானே முத்திரை மோதிரம் எப்படி அவனிடம் வந்தது என்று தெரிந்து கொள்ள முடியும்?''

''அவன் உண்மையைச் சொல்லுவான் என்பது என்ன நிச்சயம்?''

''உண்மையைச் சொல்லும்படி செய்வதற்கு வழிகள் இருக்கின்றன.

தாயே! பாதாளச்சிறை இருக்கவே இருக்கிறது. ஒற்றனுக்கு இதுவும்தெரிந்திருக்கிறது. அதனால்தான் மறுபடியும் தலைமறைவாகி இரவுக்கிரவே கோட்டையிலிருந்து தப்பி ஓடி விட்டான். சம்புவரையர் மகளையும்முதுகில்குத்தி விட்டு ஓடி விட்டான்!''

''அவன்தான் குத்தியவன் என்பதற்கு என்ன அத்தாட்சி?''

''கந்தமாறன் கூறியதுதான்.''

''அது போதாது! அவன் கந்தமாறனைக் குத்தவில்லையென்று நான் சொல்லுகிறேன்.''

''தாயே! தாங்கள் அருகில் இருந்து பார்த்தீர்களா?''

''பார்க்கவில்லை. ஆனால் ஒருவன் முகத்தைப் பார்த்து அவன் குற்றவாளியா, இல்லையா என்பதை என்னால் நிர்ணயிக்க முடியும்.''

''அந்தப் பொல்லாத ஒற்றன் பாக்கியசாலி. தங்களுடைய நல்ல அபிப்பிராயத்தை எப்படியோ கவர்ந்து விட்டான். அந்தப் பாக்கியம் எனக்குக் கிட்டவில்லையே?''

''ஐயா! அவனை மறுபடியும் ஒற்றன் என்று ஏன் சொல்கிறீர்?''

''தாயே! அவன் ஒற்றன் இல்லாவிட்டால் கூத்தாடிகளுடன் சேர்ந்து முகமூடி போட்டுக் கொண்டு ஏன் பழையாறையில் நுழைகிறான்? மாறுவேடம் போட்டுக் கொண்டு ஏன் கோடிக்கரைத் துறைமுகத்துக்குப் பிரயாணமாகிறான்? அவன் ஒற்றன் இல்லாவிட்டால் என் ஆட்களைக் கண்டதும் ஒரு நாள் முழுவதும் கோடிக்கரையில் ஒளிந்து திரிவானேன்? இரவானதும் படகில் ஏறி இலங்கைத் தீவுக்குப் போவானேன்?''

''ஓகோ! அவன் படகில் ஏறித் தப்பித்துப் போய்விட்டானா? உங்கள் ஆட்கள் அவனைப் பிடிக்க முடியவில்லையா?'' என்னும் குந்தவையின் கேள்விகளில் குதூகலம் தொனித்தது.

''ஆம், தாயே! அந்த மாயாவி ஒற்றன் என் ஆட்களை ஏமாற்றி விட்டுப் போய்விட்டான். இந்த முட்டாள்கள் அவனை விட்டுவிட்டு வைத்தியர் மகனைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறார்கள்...''

''ஐயா! ஒற்றன் எப்படியாவது போகட்டும். வைத்தியர் மகனை நான் அனுப்பி வைத்தேன். அவன் குற்றமற்றவன் என்பது நிச்சயம். அவனை உடனே விடுவித்தே ஆக வேண்டும்.''

''அம்மணி! இவன் ஒற்றனில்லாவிட்டாலும் ஒற்றனுக்கு உடந்தையாயிருந்திருக்கிறான். ஏதேதோ கட்டுக்கதைகளைச் சொல்லி என் ஆட்களை ஏமாற்றியிருக்கிறான். ஒற்றன் ஒளிந்திருப்பதற்கும் தப்பிப் படகிலேறிச் செல்வதற்கும் இவன் உதவி செய்திருக்கிறான்......''

''அதெல்லாம் எப்படியிருந்தாலும் வைத்தியர் மகனை விடுதலை செய்தேயாக வேண்டும்......''

''அந்தப் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்ளச் சித்தமாயில்லை. நாட்டின் நாலு புறமும் அபாயங்கள் சூழ்ந்திருக்கின்றன. பகைவர்கள் படையெடுக்கக் காத்திருக்கிறார்கள். வீரபாண்டியனுடைய ஆபத்துதவிச் சேவகர்கள் சோழ குலத்தைக் கருவறுக்கச் சபதம் செய்திருக்கிறார்கள். நாடெங்கும் சதிகள் நடந்து வருகின்றன...''

''ஐயா! சதி செய்பவர்கள் எல்லோரையும் சிறையில் போடுவதாயிருந்தால் சிறையில் இடமே இராது.''

''இடம் இருக்கும் வரையில் போடலாம் அல்லவா?''

''உண்மைச் சதியாளரைப் போடு

---

**அவன்:** ''தண்ணீர்ப் பஞ்சத்தை விடப் பெரிய கொடுமை!''

**இவன்:** ''எதுடா?''

**அவன்:** தண்ணீர்ப் பஞ்சம் பற்றியே எல்லா வாரப் பத்திரிகையிலும் ஜோக் வர்றதுதான்!"

— உ. ராஜாஜி.



தீப ஒளியும் — வண்ணமும்
இணைசேர்ந்த திருநாள்!
ஹேண்ட்லூம் ஹவுஸில்

# 20% தீபாவளி சிறப்புத் தள்ளுபடி

எல்லா ரகங்களுக்கும்.
அக்டோபர் 1 முதல் 20 வரை

தேர்ந்தெடுக்கத்
தேவையான அகில
இந்திய கைத்தறிப்
படைப்புகள்





## ஹேண்ட்லூம் ஹவுஸ்

(முழுவதும் ஏர்கண்டிஷன் செய்யப்பட்டது)
7, ரத்தன் பஜார், சென்னை 600 003.
மதுரையில் : 134, பேலஸ் சாலை, மதுரை-1.

● ஞாயிறு மற்றும்
விடுமுறை நாட்களிலும்
விற்பனை உண்டு.

ADWAVE/HH/3405C



அருள்வாக்கு

ஆசைக்கும் துவேஷத்துக்கும் காரணம் அகங்காரம். அகங்காரம் தொலைந்தால் எந்தக் காரியங்களிடையிலும் உயர்வு தாழ்வு தெரியாது. நாம் பாட்டுக்கு நம் கடமை இது என்ற உணர்ச்சியோடு ஆனந்தமாகச் செய்து கொண்டிருப்போம். லோகம் க்ஷேமமாக இருக்கும். 'நான் செய்கிறேன்; எனக்காகச் செய்து கொள்கிறேன்' என்கிற அகம்பாவம் இல்லாமல் கடமையைச் செய்து பலனை ஈசுவரனுடைய பாதத்தில் அர்ப்பணம் பண்ணுவதுதான் கீதை சொல்கிற கர்ம யோகம். சொந்த விருப்பு வெறுப்பில்லாமல் லோக க்ஷேமார்த்தமாகக் காரியம் செய்து ஆத்ம பரிசுத்தி பெறுகிற இந்தப் பண்பாடு வேத காலம் தொட்டு நம் தேசத்தில் தழைத்து வந்திருக்கிறது. அந்தப் பண்பாட்டை ஒரு கையடக்கமான பேழையில் போட்டுக் கொடுத்த மாதிரி கீதையில் அநுக்கிரகம்செய்திருக்கிறார் கிருஷ்ண பரமாத்மா.

இந்த உபதேசத்தை நம் வாழ்க்கையில் ஒவ்வொரு காரியத்திலும் உரைத்து உரைத்து அலசிப் பார்க்க வேண்டும். "இந்தக் காரியத்தில் சொந்த லாபம், பேர், புகழ் இருக்கிறதா? ஆசை இருக்கிறதா? துவேஷம் இருக்கிறதா? பட்சபாதம் இருக்கிறதா? இவை இருந்தால் வெளிப் பார்வைக்கு நாம் செய்வது எத்தனை உயர்வாக இருந்தாலும் அது பாபம்தான்" என்று நாம் செய்கிற ஒவ்வொரு செயலையும் அலசி அலசிப் பார்க்க வேண்டும். சமமான அன்புடன் இருந்து கொண்டு சுத்தமான எண்ணத்தோடு அவரவரும் இப்படித் தன் கருமத்தைச் செய்தால் சமூகத்தில் போட்டி பொறாமை, சண்டை, சச்சரவு, எதுவுமே இருக்காது. லோகமே இன்ப மயமாக இருக்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

வதற்குக் கொஞ்சம் இடம் மிஞ்சட்டும். ஐயா! வைத்தியர் மகனை உடனே விடுதலை செய்யுங்கள்!''

''அந்தப் பொறுப்பை நான் ஏற்க முடியாது, தாயே!''

''சக்கரவர்த்தியின் கட்டளை வந்தால் செய்வீரா! அதையும் புறக்கணிப்பீரா?''

''அம்மணி! இதற்குச் சக்கரவர்த்தியின் கட்டளை தேவையில்லை. இளைய பிராட்டியின் விருப்பம் எதுவோ, அதுவே சக்கரவர்த்திக்கு வேதக் கட்டளை என்பது உலகமறிந்த செய்தி. இதோ பாதாளச் சிறையின் சாவியைத் தங்கள் கையில் ஒப்புவித்து விடுகிறேன். தாங்களே சென்று கதவைத் திறந்து விடுதலை செய்யுங்கள். இன்னும் யாரையாவது விடுதலை செய்வதாயிருந்தாலும் தாராளமாய்ச் செய்யுங்கள். அதனால் வரும் லாப நஷ்டங்களுக்குப் பொறுப்பு தங்களது!...''

இவ்வாறு சொல்லிக் காலாந்தக கண்டர் ஒரு பெரிய சாவியை எடுத்துக் கொடுத்தார். குந்தவை பொங்கி வந்த தன் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, ''ஆகட்டும் ஐயா! லாப நஷ்டங்களுக்குப் பொறுப்பு நானே ஏற்கிறேன்!'' என்று சொல்லிச் சாவியைப் பெற்றுக் கொண்டாள்.

''இந்தச் சோழ சாம்ராஜ்யத்துக்கு ஏதாவது பெருந்தீங்கு நேர்ந்தால், அது இரண்டு பெண்களினால்தான் வந்ததாகும்'' என்றார் தஞ்சைக் கோட்டைத் தலைவர்.

''நான் ஒருத்தி; அந்த இன்னொரு பெண் யாரோ?''

''பழுவூர் இளையராணி நந்தினி தேவிதான்!''

குந்தவை புன்னகை புரிந்து "சோழ சாம்ராஜ்யத்தின் சர்வாதிகாரியுடன் என்னைக் கொண்டு போய்ச் சேர்க்கிறீர்களே? இது காதில் விழுந்தால் பெரிய பழுவேட்டரையர் தங்களைத் தேசப் பிரஷ்டம் செய்து விடுவார்!'' என்று சொன்னாள்.

''ரொம்ப நல்லதாய்ப் போய்விடும்! அதற்கு நான் காத்திருக்கிறேன்'' என்றார் சின்னப் பழுவேட்டரையர்.

(தொடரும்)

# பிரிவு நெருஞ்சி

பிடிவாதமாக டீ. வியில் நடப்பதைப் பார்த்துக் கொண்டிருந்தாள். நாடகமா? செய்தி வாசிப்பா? — மனத்தில் எதுவும் பதியவில்லை. டீ. வி. பெட்டிக்கு நேர் மேலாய் பெரியசுவர்க்கடிகாரம். மிருந்தசிரமத்துடன் மேலே நிமிராமல் இருக்க முயன்று கொண்டிருந்தாள். காலவோட்டத்தின் குதிரைக் குளம்பொலியைக் கேட்காதிருப்பது அத்தனை எளிதா?

— பிரபு பிறந்த போதே குண்டு பொஸ்கா! எல்லோர் பார்வையிலும் பொறுமையும், பிரமிப்பும் இருந்ததாக — பாதி பிரத்யட்சமும், பாதி பிரமையுமான பெருமிதம் அவனால் அவளுக்கு நிறைய நேரிட்டிருக்கிறது. பிரபு ராஜாக்குட்டி! அவனுக்குப் பின் எட்டு வருடங்கள் கழித்துத் தான் சின்னவன் பிறந்தான்! பதினொன்கு வயதில் பிரபு அவளின் ஐந்தரையடி உயரத்தை எட்டியாகி விட்டது! கணவர் ஊருக்கு வேலை நிமித்தம் அடிக்கடி போக நேரிடும் போதெல்லாம் 'கைவி'யோடு கடைகண்ணிக்குக் கூட வரும் மகன் பயத்தைத் தேவையில்லாமல் ஆக்கியவன்!

அதிகம் பேசமாட்டான். அன்போ, சோகமோ, ஏமாற்றமோ — எதுவாயினும் முகபாவங்களை அதிகம் மாற்றிக் கொள்ளாதவன். 'கருங்கல்' என்று செல்லமாகப் பெயரிட்டிருந்தாள்! சின்னவன் பிறந்த பிறகு ஆரம்பத்தில் பொறுமையுடன் கோபித்துக் கொள்வது அவனுக்குப் பழக்கமாயிருந்தது என்றாலும் போகப் போகப் பெரியவனுக்கும் சின்னவனுக்கும் இடையே உடைப்பெடுக்காத பாலம் உருவாகிப் போனது! சைக்






# Two-language Formula கவிதைகள்!



Sugar இப்போது
தாராளமாகக் கிடைக்கிறதாம்.
எந்த ஷுகர்?
Brown Sugar.

முன்பிருந்த தலைவர்களுக்கு
Swadeshi Spirit இருந்தது.
இப்போதைய தலைவர்களுக்கும்
இருக்கிறது —
Swedish Spirit.

Sideburns ஒரு காலத்தில்
ஃபாஷனாக இருந்தது.
இப்போது பிரபலம் —
Bride Burns.

Tamil Tiger
சுட்டுக் கொண்டே இருப்பார்:
ஒன்று சிங்களச் சிப்பாயை;
இல்லையென்றால், இன்னொரு
Tamil Tiger ஐ.

— ஸாஸி

கிளில் அவனைப் பத்திரமாக உட்கார வைத்துப் பள்ளிக்குக் கொண்டு விட்டு வருவது பிரபுவின் தினசரிப் பொறுப்பு!

"நீ வந்து அந்த டீச்சர்கிட்ட சொல்லு அம்மா. அப்பா நீ ஒண்ணும் வர வேண்டாம்" — ஆறடி உயர அண்ணனைப் பார்த்தால் டீச்சர் பயந்து தண்டனை தராமல் விட்டு விடுவாள் என்ற சின்னவன் கணிப்பு நிறைய நேரங்களில் சரியாக இருந்திருக்கிறது!

...அன்றைந்து பார்க்காவிட்டால் என்ன? மனத்திற்குள் மணி சொல்லும் கடிகாரம் மிகத் துல்லியமாக ஓடிக் கொண்டிருக்கிறது. ஒன்பது மணி ஆகியிருக்கும்... இன்னும் அரைமணி நேரத்தில் வண்டி புறப்பட்டு விடும். இரவு முழுக்க, நாளை முழுக்க ஓடி ஓடி மகனை ஆயிரம் மைல்களுக்கப்பால் கொண்டு இறக்கி விட்டுவிட்டு, தான் மட்டும் திரும்பிவிடும்.

மளமளவென்று கண்களில் நீர் நிரம்பி வழியத் தொடங்கியது. ரயிலடிக்குப் போகாமல் நின்று விட்டாள். கணவனும், மகனுமாக ரயிலுக்குள் ஓட, அனாதையாய்ப் பிளாட்பாரத்தில் நிற்கும் சோகம்தாள முடியாது. அதுவும் இரவுப் பொழுதில் நிகழும் பிரிவு... பயமும், பலவீனமும் மனங்கொள்ளாமல் பெருகுகிறது.

"அம்மா, ஐஸ் ஐம்பது பைஸா என்று கூறுகிறான் வண்டிக்காரன். என்னிடம் ஒரு ரூபாய்தான் இருக்கு." என்று தலைதெறிக்கத் தன்னிடம் ஓடி வந்து முறையிட்ட இரண்டாம் வகுப்புக் குழந்தை இன்று பெரியவனாய் சம்பாதிக்கப் போகிறது! எத்தனைவேகவேகமாய் விரைகிறது காலம்! நிரம்ப வயதாகி விட்டதுபோல் சோர்வு ஏற்பட்டது.

நிறைய அறிவுரை கூறி அனுப்பியிருக்கிறாள். திருப்பித்திருப்பிக்கூறி அனுப்பியிருக்கிறாள் — 'எண்ணெய் தேய்த்துக் கொள். கண்ட சிநேகிதம் வேண்டாம். தனிமை உணர்வு மேலிடும் போது ஜாக்கிரதையா இரு. பழக்கங்கள் ஏற்படுத்திக் கொள்வது எளிது. ஞாபகமாக வாரம் ஒன்றாவது கடிதம் எழுது. தாடி வைத்துக் கொள்ளாதே.'

இனி மகன் மாதமொருமுறையோ, வருடம் இருமுறையோ வரும் விருந்தினன் போல் என்ற எண்ணம் வலித்து வலித்து அழச் செய்தது. மிக மிகத் தனியாக உணரச் செய்தது. தவிப்பில், கடந்த ஒரு வாரமாகவே இரவில் தூக்க மாத்திரை தேவைப்பட்டது.

"பைத்தியம். என்ன இது குழந்தை மாதிரி? நானெல்லாம் பதினெட்டு வயதில் வேலைக்குப் போனவன்தான். நாலு இடங்களில் தனியாகப் போய் இருந்து பழகப் பட்டால்தான் வாழ்க்கை இன்னதென்று விளங்கும். அவன் என்ன பச்சைக் குழந்தையா? அழாதே."

கணவர் எத்தனை சமாதானப் படுத்தியும் சமாதானம் அடைய முடியாமல் தெறிப் போனது மனது. ஆறடி உயரத்தில் ஆறாறு




டோபூ சைக்கிள் ஓட்டிய பருவத்திலிருந்து, உங்கள் குழந்தைகள் வளர்ந்து பெரியவனுவதை கவனியுங்கள். இரண்டு வயது குழந்தைகளுக்கான மூன்று சக்கர சைக்கிளில் துவங்கி உங்களின் எட்டு வயது பையன், உறுதியான பைசைக்கிள்களில் சுற்றி வருவதைக் கண்டு மகிழலாம். அக்குழந்தைகளுக்கு, பாலன்ஸ் செய்யவும், கன்ட்ரோல் செய்யவும் கற்றுத் தரும் சைக்கிள்கள்,அத்துடன் அவர்களுக்கு நல்ல நம்பிக்கையையும் ஏற்படுத்துகின்றன.

விரிவான பலதரப்பட்ட வண்ணங்களிலும் டிசைன்களிலும் கிடைக்கும், இந்த குரோம் பெயிண்ட் பூசப்பட்ட நேர்த்தியான சைக்கிள்கள், எஃகு மற்றும் முறிந்துபோகாத உறுதி வாய்ந்த பாலிமெர்களால் தயாரிக்கப்பட்டவை. அதுமட்டுமல்ல ; கடுத்தமான தரக்கட்டுப்பாட்டின் கீழ் தயாரிக்கப்பட்டவை. ஏனெனில், குழந்தைகள் விஷயத்தில் நாங்கள் எதையும் விட்டுக்கொடுப்பதில்லை.

everest/d87/TE/279 tam

**Tobu®**

குழந்தைகள் ஓட்டி மகிழும் சைக்கிள்கள்.

**டோபூ என்டர்பிரைசஸ் பிரைவேட் லிமிடெட்,**
8/29, கீர்த்தி நகர் இண்டஸ்ட்ரியல் ஏரியா, நியூதில்லி - 110015

# தேவேந்திரா சாரீஸ்

**மிகமிக உயர்ந்த பட்டும் நூலும் கலந்து தயாரிக்கப்பட்டது.**

**H.O:27, ஏலா கந்தப்பன் தெரு, சென்னை-3, போன்: 33113**

**கிளை ஷோ-ரூம்: கடை எண்: 7, ராம்ஸ் பஜார், (பனகல் பார்க் எதிரில்)**

**தியாகராயநகர், சென்னை-17. போன்: 443367**

**தேவேந்திரா புடவைகள் கிடைக்கும் இடங்கள்:**

"கிருஹலக்ஷ்மி" மாதர்கள் கூட்டுறவு அமைப்பு, C79 விகாஸ்புரி (போஸ்டெல்லா), புது டெல்லி - 110018. ★ காமாட்சி சில்க் ஹவுஸ், 5/38, W.E.A. அஜ்மல்கான் ரோடு, கரோல் பாக், புது டெல்லி - 5, போன்: 581050, 561786. ★ திருமதி உமா சுப்ரமணியம், II-A-97-B, லஜ்பத் நகர் II, புது டெல்லி - 110024, போன்: 616552. ★ திருமதி விமலா ராகவன் 6/66, W.E.A. கரோல்பாக், புது டெல்லி - 110005. ★ பங்கஜம் சுந்தரராஜன், C6/A D.D.A. Flats, முனிர்கா, புது டெல்லி - 67. ★ Mrs சாரதா, 16/449, விரம் பில்டிங், மாதுங்கா, பம்பாய் - 19. ★ சுசீலாமணி, 22, காந்தி மஹால், தேஜோ கோயா பார்க், வின்சென்ட் ரோடு, மாதுங்கா, பம்பாய் - 19. ★ லக்ஷ்மி நாராயணன், 5, வாணி கோ-ஆப்ரேடிவ் ஹவுசிங் சொஸைட்டி, வல்லபாக் ரோடு, காட்கோபர், (கிழக்கு) பம்பாய்-77. ★ நல்லீஸ் சில்க் சாரீஸ் ★ சென்டர், 401, டெலாங் ரோடு, மதுங்கா, பம்பாய்-19. ★ சோலங்கி கிளாத் ஸ்டோர்ஸ், 7, திலகந்தி வாலா பில்டிங், எல்.என். ரோடு, மாதுங்கா, பம்பாய்-19. ★ லதா கிருஷ்ணன், பிளாட் நெ.20, காம தேனு கோ.ஆப். பெஸ்டம் சாகர், செம்பூர், பம்பாய்-89, (கிளாஸ் பாக்டரி அருகில்). ★ ஆர். ராஜாமணி அம்மாள், 46, முத்து மாரியம்மன் கோவில் தெரு, பாண்டிச்சேரி - 605 001. ஜெயஸ்ரீ, 2-A, தேசப்பிரியா பார்க் ரோடு, கல்கத்தா - 26. ★ திருமதி T.S. சகுந்தலா சீனிவாசன், 18/1-A, லால்பாக் போர்ட் ரோடு, (மினர்வா & பஸப்பா சர்க்கிள் மத்தியில்) பெங்களூர், போன்: 224357, 96/1 கிழக்கு பார்க் ரோடு (மல்லேஸ்வரம் போஸ்ட் ஆபீஸ் அடுத்து), பெங்களூர் - 560003. ★ திருமதி துர்காம்பாள், 22, சேஷபுரம், தென்னூர், திருச்சி - 620017. ★ திரு. S. சேதுராமன், 9, பாணத்துறை சன்னதி தெரு, கும்ப கோணம் - 612001, போன்: 972. ★ ராணி சில்க், 13, மஹால் 4-வது தெரு, மதுரை - 1, போன்: 26295. ★ திருமதி S. லட்சுமி, 24, சீனிவாசா தெரு, சேலம் - 1. (ரயில்வே ஸ்டேஷன் அருகில்) ★ லக்ஷ்மி சத்தியமூர்த்தி, 1044, திருச்சி ரோடு, ராமநாதபுரம், கோயம் புத்தூர் - 641045. ★ ஸ்ரீ முருகன் கிளாத் ஸ்டோர், 3, ஆரோக்கியசாமி ரோடு கிழக்கு, R.S.புரம், கோவை - 2. மஹாராஜா சில்க்ஸ் 76, உடுமலை ரோடு, பொள்ளாச்சி-1, போன்: 4191 ★ மகாலட்சுமி சில்க் சென்டர், தீன் பில்டிங், (உள்புறம்) 175/11, மேல வீதி, சிதம்பரம். ★ ஹேமாவதி ஏஜென்சிஸ், 2711, நாணயக்கார செட்டி தெரு, தஞ்சாவூர். ★ பாகீரதிமூர்த்தி, 100, ஸ்ரீ வராஹபுரம் தெரு, கல்லிடைக்குறிச்சி, திருநெல்வேலி. ★ S. சுந்தரம், 9, சாஸ்தான் கோவில் தெரு, வடிவீச்வரம், நாகர்கோவில் - 2. ★ திருமதி K. சீதாலட்சுமி, 41, 4-வது டிரஸ்ட் கிராஸ் தெரு, மந்தவெளிப்பாக்கம், சென்னை - 28, போன்: 73244. ★ திருமதி சாவித்திரி பாலசுப்பிரமணியம், 2, 7-வது தெரு, நங்கநல்லூர், சென்னை - 61, (பிள்ளையார் கோவில் அருகில்) போன்: 433737. ★ திருமதி சரோஜா கிருஷ்ணமூர்த்தி, A9/386, புதிய குடியிருப்பு (முதல் மாடி) குடிசை மாற்று வாரியம், திருமங்கலம், அண்ணா நகர் மேற்கு, சென்னை - 600 107. (ஸ்ரீ சத்திய சாயிபாபா கோவில் அருகில்) ★ M/s. பாலாஜி கிளாத் சென்டர், 22-A, கக்கன் தெரு, (வித்யா தியேட்டர் எதிரில்) மேற்கு தாம்பரம், சென்னை - 45. ★ திருமதி சுலோசனா கோவிந்த், 2, M.I.T. லெவல் கிராஸிங், குரோம்பேட்டை, சென்னை - 44. ★ S. பொன்னப்பன், 8-3-282 IInd பஜார், செகந்திராபாத் A.P. போன்: 59562.

குறிப்பு: மற்ற இடங்களில் வாங்குவது எங்களுடைய தயாரிப்பு அல்ல.

---

Advt.

பாகுவாய் வளர்ந்திருந்தாலும் மகன் ஏதோ திக்குத் தெரியாத காட்டில் மிருகங்களுக்கிடையே மாட்டிக்கொண்டு அழுவதாகக் கனவும், நினைவும் அடிக்கடி தூக்கிவாரிப் போடச் செய்தன... இவன் அழகுக்காகப் பெண்கள் வட்டமிட்டு அவனை வழிமாறச் செய்துவிடுவதாய்; கள்ளக்கடத்தல்காரர்கள் தங்களிடம் மாட்ட வைத்து விடுவதாய், நோஞ்சான் அதிகாரி நாலுபேர் எதிரில் அவனைக் கடிந்து கொள்வதாய்... பிரபு கோபக்காரன். அடிதடியில் இறங்கி விடக் கூடாது... ரோஷக்காரன் — தனிமையும், அவமானமும் சேர்ந்து அவனைத் தூண்டி விட்டால்... என்னவாகும்?

இருபது வயதில் வேலைக்கனுப்புவதில் ஏதோ ஒரு குற்றமிழைத்து விட்ட சோகம் அலைக்கழித்தது. கணவருக்கும் அந்த அலைக்கழிப்பு இருந்தது தெரிந்தது. ஆயிரம் அறிவுரைகள் கூறி அவளைத் தூங்கச் சொல்லிப் பாஸ்கரன் பின் இரவில் நெடுநேரம் விட்டத்தை வெறிப்பது அவளுக்குத் தெரியாதா என்ன? ஆனால் இன்றைய போட்டி நிறைந்த, அவசர வாழ்க்கையில் எத்தனைக் கெத்தனை சீக்கிரம் வேலையில் சேருகிறோமோ அத்தனைக் கத்தனை நல்லதுதானே... தவிர, பாஸ்கரன் மானப்பிரச்னையில் வேலை மாறியதில், குடும்பத்தின் பொருளாதார நிலை வேறு சற்றுப் படுத்துப் போனது... பிரபு வேலை பார்த்தால் அதை நிமிர்த்த வழியுண்டு. தபால்வழி நிறையப் படிக்கிறான். வயதிருக்கிறது; திறமையிருக்கிறது; அழகிருக்கிறது அன்பு மகனுக்கு... யார் கண்டது — விரைவில் இங்கேயே வேலை கிடைத்து மறுபடி பிள்ளையின் அருகாமையில் இந்தப் பிரிவும், வலியும் சொப்பனமே போல் ஆகலாம்...

இன்று முழுவதும் முள் குத்துவதும், துடித்து எடுத்துத் தூரம் போடுவதும், திரும்பக் குத்துவதுமாய் — கண்ணீரில் களைத்துப் போனாள். பிரயாணத்திற்குத் தயார் செய்து கொண்டிருந்த மகனை, நிலைக் கண்ணாடியின் முன் தலைவாரிக் கொண்டிருந்த மகனை, சாப்பிட அமர்ந்தவனை, — அவன் ஒவ்வொரு அசைவையும் தீராத் தாகத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள். தன்னிலிருந்து ஏதோ ஒன்று பிரிகிறது; திரும்பச் சேருவது துர்லபம் என்றவிதமான ஏக்கத்தில் மனம் உருக, ரகசியமாய்ப் பார்த்துக் கொண்டிருந்தாள். கணவருக்கும், மகனுக்கும் கூட மனத்திற்குள் கண்ணீர் வடிந்து கொண்டுதான் இருக்கும்... ஆனால் ஆண்கள் அழக் கூடாது என்பதால் அழுகையை உறையச் செய்திருப்பார்கள். பாஸ்கரனாவது தனிமையில் அவளிடம் கண்கலங்கிப் போனார். ஒருநாள் தூக்கத்தில் தேம்பினார். பிரபு அப்படியெல்லாம் செய்ததே கிடையாது. அவன் சினேகிதர்களிடம் அவன் திறந்து கொண்டிருப்பான் என்று தோன்றியது. பயங்களை, கனவுகளை, சலிப்புகளை, சந்தோஷங்களையெல்லாம் பரிமாறிக் கொள்ள சினேகிதர்களை விடச் சிறந்த சுமை தாங்கிகள் யாரிருக்க முடியும்?

# ஜோக்

## எழுதுங்கள்
## பரிசு ரூ. 200/-



ஐப்பசி, கார்த்திகை நெருங்குகிறது. மழை வேண்டி பிரார்த்திக்காதவர்கள் யார்? மழை ஜோக்குகள் எழுதியும் வருணனை வணங்கலாமே! கீழே வெற்றிடத்தில் ஒரு ஒரிஜினல் மழை ஜோக் எழுதி இந்த அரைப்பக்கத்தை முழுமையாகக் கத்தரித்து விலாசத்தைப் பூர்த்தி செய்து அனுப்புங்கள். உறையின் மேல் ''மழை ஜோக்'' என்று குறிப்பிடுதல் அவசியம். பிரசுரமாகும் ஜோக்குகளுக்குப் பரிசுத் தொகை பகிர்ந்து அளிக்கப்படும்.

**முடிவு தேதி: 21.10.87**

என் பெயர்: . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

விலாசம்: . . . . . . . . . . . . . . . . . . . . . . . .

மலர் என்பார்,
மதி என்பார்,
மயில் என்பார்.
எப்படி
அழைப்பினும்
கண்ணே,
ஈடில்லை எதுவும்
உனக்கு!

ஸென்ஸேஷன்ஸ்
ஸாரிகள் மற்றும் ட்ரெஸ் மெட்டீரியல்ஸ்

# மஃபத்லால்

—நம்பிக்கைக்குப் பெயர் பெற்றது

ம:பத்லால்
:பேப்ரிக்ஸ்



Location Courtesy: The Taj Mahal Hotel, Bombay.

MF 635 D TAM

பெட்டி படுக்கையோடு கணவனும், மகனுமாக... — கூட கணவரின் தோழர்கள் ஓரிருவர், மகனின் சிநேகிதர்கள் சிலர். படியிறங்குவதற்கு முன் மகன் 'போய்ட்டு வரேம்மா' என்று சொல்லி விடக் கூடாதே; தாள முடியாதே என்று உயிரைக் கையில் பிடித்து வைத்திருந்தாள். அவள் எண்ணம் அறிந்தவன் போல் அன்பு மகன் அந்த நஞ்சுதோய்ந்த வார்த்தைகளை அவளை நோக்கி வீசியெறியாமல் ஒரு கணம் அவளையே பார்த்தான். அந்த ஒரு கணத்திலும் அவன் மனத்திலும் அம்மா, அவள் தன்னைப் பராமரித்தது எல்லாம் திரைப்படமாக ஓடியிருக்கும். தன்னை எத்தனை சார்ந்திருக்கிறாள் அம்மா என்று பிரபுவுக்குத் தெரியும். 'உடம்பைப் பார்த்துக்கோம்மா' என்று தோள்மேல் கையைவைத்துக் கூறினான். உடைந்து போனாள் அவள்.

"ப்ளீஸ், மிஸஸ் பாஸ்கரன், நீங்க இப்படி அழுதால் அவன் சின்னப்பையன் எப்படி நிம்மதியாகப் போக முடியும்? தைரியமா இருங்க. வாழ்க்கையில் இந்த மாதிரிப் பிரிவுகள் சகஜம்; தவிர்க்க முடியாதவை. இன்னும் ஒரு மாதத்தில் திரும்பி வரப் போகிறான். இரண்டு மூன்று பரீட்சைகள் எழுதியிருக்கிறான். இன்னும் நிறைய எழுதவேண்டியிருக்கு விரைவில் இங்கேயே வேலை கிடைத்து விடலாம்... தைரியமா இருங்க."

— கணவரின் தோழர் பலவகையில் ஆறுதல் கூறியும் பாக்ஸிக்குள்ளிருக்கும் மகனைப் பார்க்க முடியாதபடி கண் நிறைந்து போனது. "அண்ணா எப்ப வருவான்?" என்று அருகிலிருந்த சின்னவனும் பிரிவுத் துயரத்தில் தேம்பினான்..

...நினைத்துப் பார்த்தால் அப்பாவும், பிள்ளையும் அவளில்லாமல் தனியாய் இருப்பது இதுதான் முதல் முறை. இதுநாள் வரை இருவருக்குமிடையில் அவள் ஒரு பாலமாய் இயங்கி வந்தாள். பாஸ்கரனுக்குப் பிள்ளையின் மேல் பற்று அதிகம். அதனால் அவனை விரைவில் வேலைக்கனுப்புவதில் குற்றவுணர்வு அதிகமாக அவருக்குத்தான் இருக்கும்... 'இந்தாறு வயதிலேயே வேலைக்குப் போகும் குழந்தைகள் இருக்கிறார்களே' என்று தன்னைத்தானே சமாதானப்படுத்திக் கொள்வதற்காகக் கூறிக் கொள்வார். மகன் — தந்தை மனம்விட்டு, சிநேகிதர்களாகப் பேசிக் கொள்ளும் சந்தர்ப்பங்கள் அமைந்ததில்லை என்றாலும் பிரபுவின் அண்மை அவருக்கும் ஒரு தைரியம். இப்போது பிரிகையில் பிரிவுத் துன்பத்தின் பரிமாணம் அவரையும் தாக்கும். அவளைப் போல் அவரால் அழவும் முடியாது. இந்தப் பயணம் தந்தை, மகனுக்குள்ளே இறுக்கம் தளர்த்தி, ஒரு புது நெருக்கத்தைச் சம்பவிக்கச் செய்யலாம். 'நிறைய வயதாகி விட்டது போல் இருக்கிறது.' என்று கடந்த ஒரு வாரத்தில் எத்தனை முறை கூறியாகி விட்டது பாஸ்கரன்...!

"அம்மா, ஒன்பதரை மணி. வண்டி கிளம்பியிருக்கும்!"

— சின்னவன் கத்த, அதிர்ந்தவளுக்கு அவனை அறைய வேண்டும் போல் வெறியெழுந்தது.

"கூ... குக்குக், குக்குக், கூ..." என்று குழந்தையாய்க் கூச்சலிட ஆரம்பித்து, அண்ணா ஞாபகம் வர, பாதியில் நிறுத்தி, அலங்க மலங்க விழித்தது. மெதுவாக நகர்ந்து வந்து தாயின் மடியில் முகம் புதைத்துக் கொண்டது.

அவள் அப்படியே அமர்ந்திருந்தாள். கையை அசைத்து விடைபெறுவதும், அழுகையும், ர யி லோ டு ஓ டி த் தளர்தலும் மனத்திரையிலே காட்சி காட்சியாய் நடந்தேறின...

—ஸ்டேஷனில், பிரபுவை வழியனுப்பி விட்டு வெளியே வந்த அவன் நெருங்கிய சிநேகிதன் பிரகாஷின் முகம் சோர்ந்திருந்தது. கைக்குட்டையில் முகத்தை அழுந்தத் துடைத்துப் பிரிவைத் தூரத்த முயன்றபடி தன் வண்டிக்காகக் காத்திருக்க ஆரம்பித்தான்!

---

1939 ஆம் ஆண்டு.

அந்த இளைஞனுக்கு வயது 19. ரோபாட் என்னும் இயந்திர மனிதனைப் பற்றிய முதல் கற்பனைக் கதையை அவன் எழுதினான்.

1950 ஆம் ஆண்டு.

ஒரு புத்தக வெளியீட்டு நிறுவனம் அந்த எழுத்தாளருடைய ஒன்பது ரோபாட் கதைகளைத் தொகுத்துப் புத்தகமாக வெளியிட்டது.

ஜோசப் எங்கல்பர்ஜர் என்ற ஒரு பொறியியல் வல்லுனர் அந்தப் புத்தகத்தைப் படிக்க நேர்ந்தது. 'அப்படி ஒரு இயந்திரத்தைத் தயார் செய்வது' என்ற தீர்மானத்தை மேற்கொண்டார். இன்று உலகின் தலை சிறந்த ரோபாட் உற்பத்தியாளர் அவர்.

"பெருமையை எனக்குத் தந்துவிட்டு ஜோசப் பொருளையெல்லாம் தான் வைத்துக் கொண்டுவிடுகிறார்!" என்று வேடிக்கையாகக் கூறும் அந்த எழுத்தாளர் "ஐசக் ஆஸிமவ்."



— பி. எஸ். கே. சுப்பிரமணியம்

# நிழல் நிஜம் வேண்டும்

# 11

காலையில் கண்ணைத் திறந்ததும் ஜன்னல் கதவுகளில் எதிரும் புதிருமாக அமர்ந்து காரசாரமாகச் சண்டை போட்டுக் கொண்டிருந்த அந்தப் பட்சிகள் தென்பட்டன.

இன்னும் வெயில் ஏறவில்லை. இரவு தூங்காத அலுப்புடன் ஆஸ்பத்திரி சிப்பந்திகள் விழித்துக் கொண்டிருந்தாலும், பாதி நோயாளிகள் இன்னும் தூங்கிக் கொண்டிருந்தார்கள்.

கழுத்துக்கடியில் கைகளைக் கோத்துப் படுத்தபடி ஜயசீலன் அந்தப் பறவைகளைப் பார்த்தான். வெவ்வேறு இனப் பறவைகள். இதுவரை அவன் பார்த்திராதவை. ஒரு பக்கம் குருவியைப் போலச் சின்னதாக, கறுப்பாக மெல்லிய அலகுடன் இருந்தது. எதிர்ப்பக்கம் புறாவுக்கும் காகத்துக்கும் இடையிலான உருவமும் பழுப்பு நிறமுமாக ஒரு பறவை. இரண்டும் ஆக்ரோஷத்துடன் சண்டை போட்டன. அதனுடைய சம்பாஷணை உத்தேசமாக என்னவென்று அவனுக்குப் புரிந்தது.

''என்னுடைய இடத்தை நீ எப்படி ஆக்கிரமிக்கலாம்?'' என்றது பழுப்பு.

''இந்த இடம் எனக்குச் சொந்தம்'' என்றது கறுப்பு.

''இடத்தைக் கொடுத்தால் மடத்தைப் பிடுங்கும் ஜாதி நீ. நீ அகன்றால்தான் எனக்கும் என் குழந்தைகளுக்கும் நிம்மதி!''

''அத்தனைச் சுலபமாக என்னை அகற்றி விடுவாயோ? என் அலகின் கூர்மை உனக்குத் தெரியாது!''

''சீச்சீ, இத்தனைச் சின்ன உருவம் உனக்கு இதிலே திமிர் வேறு?''

''திமிருன்னு சொன்னே, திமிரா?''

''குட்மார்னிங், ஜயசீலன்!''

தூக்கிவாரிப் போட்டு ஜயசீலன் திரும்பிப் பார்த்தான்.

பிரபு தனது வழக்கமான உற்சாகத்துடன் நின்றிருந்தான்.

''என்ன யோசனையில் இருக்கே?''

லேசாகச் சிரித்தபடி ஜயசீலன் பறவைகளைச் சுட்டிக் காட்டினான்.

''சிங்களனுக்கும் தமிழனுக்கும் சண்டை நடக்கிறது பாருங்கோ!''

''யோவ் ஜயசீலன், ராமேசுவரம் போனாலும் சனீச்வரன் விடல்லேம்பாங்க. உன் வரையிலே அது சத்தியமான வார்த்தை!''



பறவைகள் இப்பொழுது பேசாமல் அமர்ந்தன.

''என்ன இப்ப, ஸீஸ்ஃபையரா?''

ஜயசீலன் ஒன்றும் சொல்லாமல், அடுத்து அவை என்ன செய்யும் என்கிற சுவாரஸ்யத்துடன் பார்த்தான்.

திடீரென்று பழுப்பு கறுப்பருகில் சென்று அமர்ந்தது. அலகினால் அதன் உடம்பைச் சல்லாபமாக வருடிற்று. பிறகு இரண்டும் சேர்ந்து பறந்து சென்றன.

''சமாதானம் ஏற்பட்டுப் போச்சு. நல்ல சகுனம் ஜயசீலன்!'' என்று பிரபு சிரித்தான்.

''இத்தனை எளிமையா மனுஷ இனமும் இருந்தா உம்மை நம்பலாம்தான்!''

''ஏனய்யா சமாதானம் வந்தா அதை ஏற்க உனக்குக் கசக்குதா?''

''இந்த எதிர்பார்ப்பையே என்னாலே ஏற்க முடியல்லே. இரண்டு இனத்துக்கும் நடுவிலே ஏற்பட்டிருக்கிற பிளவோட ஆழத்தை எப்படி மூடறது?''

''ஏன் முடியாது? பழசை மறக்கறது கஷ்டந்தான்; அதுக்காகச் சமாதானப் பேச்சுக்கே இடமில்லேன்னு சொல்லிட முடியுமா? யுத்தம் நீடிச்சுக்கிட்டே இருக்கிறது யாருக்கு ஜயசீலன் பிடிக்கும்?''

''துவக்கைப் பிடிச்சவனுக்குப் பிடிக்கும்! ஏனென்டா, இனிமே துவக்கைப் பிடிக்காதேன்னு சொன்னா தடுமாறிப் போவான், ஊன்றுகோல் பிடுங்கப்பட்டாற் போல.

''அவனுக்கும் களைப்புன்னு ஒண்ணு இருக்கும் ஜயசீலன்!''

''தலைமைப் பீடத்துக்குப் போட்டிப் போடறவனுக்கு ஏது களைப்பு? ஒருத்தனை ஒருத்தன் கழுத்தை நெரிக்கப் பார்ப்பான். அவங்களுக்காகப் போராட்டத்திலே நுழைஞ்ச அப்பாவிப் பொடியன்கள், ஊர் பெயர் தெரியாத தியாகியா பலியாவான்கள்!''

''இனப் போராட்டங்களிலே எல்லாம் இந்த அம்சம் இல்லாம இருக்காது ஜயசீலன்! அதுக்காகச் சமாதானம் என்கிறது ஏற்படவே முடியாதுன்னு சோர்ந்து போறது சரியில்லே.''

என்று பிரபு சொல்லிக் கொண்டிருந்த போதே,

''என்னய்யா அகதி, இன்னிக்கு டிஸ்சார்ஜ் ஆவுறியா?'' என்றபடி ஆயா வந்தாள்.

அவன் தலையை ஆட்டியபடி எழுந்தான். இங்கு எல்லாரும் 'வா போ' என்று பேசுவது வேடிக்கையாக இருந்தது. யாழ்ப்பாணத் தமிழில் எந்த நிலையிலும் மரியாதைக் குறைவாக இருக்காது.

ஆ, நமக்கென்ன மரியாதை வேண்டிக் கிடக்கு? ஆயா சொன்னது போல் நான் ஒரு அகதி இப்பொழுது.

''இந்த ஆள் இப்படித்தான் அடிக்கடி தனக்குத்தானே பேசிக்குவான். நீ கண்டுக்காதே ஆயா!'' என்றான் பிரபு. ''இன்னிக்கு டிஸ்சார்ஜ் ஆயிட வேண்டியதுதான். மண்டபத்துக்கு இன்னிக்குப் போறே ஜயசீலன்! ஞாபகமிருக்கா?''

''அதைத் தவிர வேற நினைப்பில்லே.''

''நினைச்சேன்! நீ முகத்தைக் கழுவு. நா ரெண்டு காப்பி கொண்டு வர்றேன்!''

பதிலை எதிர்பாராமல் பிரபு விரைவதைக் கண்டு மனம் நெகிழ்ந்தது.

இந்தியத் தமிழர்களைப் பற்றிப் பொதுவாக யாழ்ப்பாணத்தில் எல்லாரும் அலட்சியமாகப் பேசுவதை அவன் கேட்டிருக்கிறான். அப்படிப் பரவலான ஓர் அபிப்பிராயத்தை வளர்த்துக் கொள்வது எத்தனைத் தவறு என்று வெட்கமேற்பட்டது. தோட்டத் தமிழர்களைக் குறிப்பிடும்போது அவன் தாத்



தாவே சொல்லியிருக்கிறார். 'கள்ளத் தோணிப் பயல்கள்' என்று! அவர்களது பிரஜா உரிமை பறிக்கப்பட்டதைப் பற்றிப் பேச்சு வரும்போது "கள்ளத் தோணியிலே வந்தவங்களுக்கு எதுக்கு இலங்கைப் பிரஜா உரிமை, நம்ம சூழியைப் பறிக்கவா?" என்பார்.

யார் யாருடைய சூழியைப் பறித்தார்கள் என்று தெரியவில்லை. பிரஜா உரிமை இருந்தும் அதற்கு அர்த்தமில்லாமல் போன காரணத்தால் நாற்பது வருஷங்களில் தன்னுடைய பேரனும் கள்ளத் தோணியில் ஏறி இந்தியாவுக்கு ஓடுவான் என்று தாத்தா நிச்சயம் நினைத்திருக்க மாட்டார்.

"ரயில்வே ஸ்டேஷன்லே வந்து சேர்ந்துக்கறேன்" என்று சொல்லியிருந்தான் பிரபு.

மண்டபம் செல்லும் ரயில் கிளம்பிக் கொஞ்ச நேரம் வரை அவனைக் காணோம். ரயில் பெட்டி கொள்ளாத அகதிக் கும்பல். தங்களிடையே பேச எதுவும் இல்லை என்று நினைத்தாற் போல் வாயை மூடிக் கொண்டு வெட்ட வெளியைப் பார்த்தார்கள். அந்த மௌனமே பீதியைக் கிளப்பிற்று. பாம்பன் பாலத்தை மிகமிக மெதுவாக ரயில் கடந்த போது, சில மீசை முளைக்காத இளவட்டங்கள் ஆர்வத்துடன் வெளியே எட்டிப் பார்த்தன. சீலியாவின் தம்பி ஜோஸப்பும் இப்படித்தான் வந்து சேர்ந்திருப்பான். இங்கே பள்ளிக்குச் செல்ல வசதியிருக்கிறதாம். செல்கிறானோ என்னவோ! சீலியாவும் இங்கேயே இருந்தால் அவனைக் கவனித்துக் கொள்வாள்.

இருப்பாளா?

அவனுக்கு நெஞ்சு நடுங்கிற்று. கடவுளே, அவள் இருப்பாள் என்கிற ஒரே ஆசையால் தான் பேடியைப் போல இங்கு வந்தேன். எல்லாருக்கும் ஆவது எனக்கும் ஆகட்டும் என்று இருந்தவன்தானே! இங்கே அவள் இல்லாவிட்டால் எங்கே என்று தேடுவது? அறுபத்து எட்டு அகதி முகாம்கள் இருக்கிறதாம், தென்னிந்தியாவில். ஆனால் சாதாரணமாக அகதியாக வந்திருந்தால் மண்டபத்திற்குத்தான் முதலில் வருவார்கள்," பெயர் பட்டியல் வைத்திருப்பார்கள் என்றார்கள். எத்தனை சின்ன நம்பிக்கை இழை இது! ஆனால் சீலியா கிடைத்து விடுவாளானால் வாழ்வே மாறிப் போகும். கடந்து வந்த துக்கங்களை எல்லாம் மறக்க தைரியம் வரும். இப்படிப்பட்ட கால கட்டத்தில் பிறக்க நேர்ந்தது எத்தனைப் பெரிய துரதிர்ஷ்டம்! காதலிக்கவும், அந்த உணர்வு எழுப்பும் வண்ணக் கனவுகளைக் காணவும் சுதந்திரமில்லாத கால கட்டம். மெல்லிய உணர்வுகளைக் கொள்வதே குற்றமாகக் கருதப்பட்ட கால கட்டம்.

குற்றம்தான். அந்தக் குற்றத்திற்காகத்தான் அவள் கடத்திச் செல்லப்பட்டாள்.

அவன் தலைமறைவாய் இருந்த சமயம் அது. உண்மைப் போராளிகள் என்று நம்பி ஒரு கும்பலோடு சேர்ந்து, 'நான் தமிழன் தமிழ் மொழி என்றன் மூச்சு' என்று கோஷமெழுப்பி, துவக்கை ஏந்தி, அது கொடுத்த மயக்கப் போர்வையில் மதிகெட்டுப் பதவிக்குப் பறந்த தலைவர்களுக்கு அடிபணிந்த நாட்கள். 'காதல்' என்கிற விஷயம் போராளிக்குக் கூடாது என்ற கட்டளையை மீறிக் காதலித்த நாட்கள். அது குற்றமில்லையா?

இப்பொழுது அவனைக் கண்டுபிடித்து விட்டால் அந்தக் குற்றங்களையெல்லாம் மறந்து விடலாம். 'நீங்கள் இருவரும் ஒரு தனி உலகத்தில் இருங்கள்' என்று ஜஸ்டின் அன்று கோபித்தது போலத் தனி உலகத்தில் இருக்கலாம். தனி உலகமானாலும் வெளி உலகத்தைப் போலச் சின்ன உலகமாக இருக்காது. சுவர்கள் எழும்பாது. மூச்சுக் காற்று துவேஷக் காற்றாகக் குரல் வளையைப் பிடிக்காது. சாவே இல்லாத உலகம் அது. அப்படிப்பட்ட உலகத்தில் அவர்களுக்குக் குழந்தைகள் பிறக்கும், இராமேசுவர அக்னி தீர்த்தத்தில் தீர்த்தமாடாமலே!

யாரோ அவன் தோளைத் தொட்டார்கள். அவன் திடுக்கிட்டுக் கண்ணைத் திறந்தான். எதிரில் பிரபு நின்றிருந்தான்.

தன் கன்னங்களில் நீர் வழிந்திருப்பதை ஜயசீலன் அப்பொழுதுதான் உணர்ந்தான்.

அவசரமாகக் கண்ணைத் துடைத்தபடி அவன் உட்கார இடம் செய்தான்.

"ஸ்டேஷனுக்கு வர - லேட்டாயிட்டுது. கடைசிப் பெட்டியிலே தொத்திக்கிட்டேன்," என்றான் பிரபு. "என்ன சமாசாரம்? மறுபடி டவுனாயிட்டியா?"

"இல்லே, ஒன்றுமில்லே!"

அவன் பிறகு பேசவில்லை. பேசப் பிடிக்கவில்லை. நல்லவேளையாகப் பிரபு ஏதும் பேச்சுக்கு இழுக்கவில்லை.

மண்டபம் முகாமின் பெரிய கதவருகில் காவலாளிகள் நின்றார்கள். உள்ளே நுழைபவர்களின் நுழைவுச் சீட்டைப் பார்த்த பிறகே உள்ளே விட்டார்கள்.

கதவருகிலேயே பிரபுவை நிறுத்தி விட்டார்கள்.

"வெளியாளுங்க உள்ளே போக முடியாதுங்க."

"நான் பத்திரிகைக்காரன் சார்!"

"அப்ப நிச்சயமா உள்ளே விட முடியாது!"

"ஏன் சார்?"

"அப்படி அரசாங்க உத்தரவு."

"சில பத்திரிகைக்காரங்க இங்கே வந்து பார்த்து எழுதியிருக்காங்க!"

"அதெல்லாம் அவங்களாத் திரிச்சது. உள்ளே விடல்லேங்கிற கோபத்திலே!"

பிரபு சற்று நேரம் பேசிப் பார்த்தான். அதிகாரிகள் மசியாமல் போகவே, ஜயசீலனைப் பார்த்துப் புன்னகை புரிந்து கையைக் குலுக்கினான்.

"சரி, ஜயசீலன். ஆல் தி பெஸ்ட்!" என்றான். "முடிஞ்சா நாளைக்குச் சந்திக்கிறேன்.





# நீங்கள் முழுமனதுடன் நம்பக்கூடியவை இரண்டு.

HOMETECH

Crompton Greaves

கிரிக்கெட் வீரர் திலீப் வெங்சர்க்கர் உங்களைக் கைவிடமாட்டார். இம் முறையும் அவர் அநாயசமாக விளையாடி அற்புதங்களை நிகழ்த்துவார் என எதிர் பார்க்கலாம். அதே ஆட்டத்திலும் அவர் "விஸ்டனின்" மிகச்சிறந்த ஐந்து ஆட்டக்காரர்களில் ஒரு சிறப்பான இடத்தையும், கம்ப்யூட்டர் மூலமாக "டிலாயிட்டின்" கணிப்பில் உலகத்திலேயே முதல்தரமான பேட்ஸ்மேன் என்ற பெயரையும் பெற்றுள்ளார். அதேபோல் உங்களுக்கு மிகச்சிறந்த தரமான நம்பக் கூடிய பொருளை விளம்பரப் படுத்துகிறோம்.

அதுதான் கிராம்ப்டன் கிரீவ்ஸ் கலர் டிவி.

இது மிக நவீன தொழில்நுட்பங்கள் பொருத்திய டெலிவிஷன் — உங்கள் உடைமை யாக்கக் கூடிய இந்த விசேஷ டிவி, பல சிறப்பம்சங்களைக் கொண்டதாகும்.

இதைவிட பரிபூரண 12-மாத உத்தரவாதம் தருகிறது. மிக விலையுயர்ந்த பகுதியான பிக்சர் ட்யூபுக்குக்கூட இதன் காப்புறுதி உள்ளது.

இணையில்லா சர்விஸ் பின்பலம் உள்ளது.

நினைவிருக்கட்டும் காலமெல்லாம் உங்கள் நம்பிக்கைக்கு உரியது கிராம்ப்டன் கிரீவ்ஸ்.

ஆம், காத்துக்கொள்ள வேண்டிய எங்கள் பெயரும் புகழும் மிகப் பெரியது அன்றோ.





Crompton Greaves

## கிராம்ப்டன் கிரீவ்ஸ் டிவி

## ஏனெனில், பல்லாண்டு இன்பமூட்டும் சாதனங்கள் சில உண்டு.

கன்ஸ்யூமர் எலெக்ட்ரானிக்ஸ் & ஹவுஸ்ஹோல்டு அப்ளையன்ஸஸ்,* கிளை; நம். 3ஏ கோடம்பாக்கம் ஹை ரோடு,
த.பெ. நம். 3316, நுங்கம்பாக்கம், சென்னை 600 034.

அப்ப விவரமெல்லாம் சொல்லு. சாயங்காலம் அஞ்சு மணிக்கு வர்றேன். கேட்டண்டை வந்தியானா சந்திப்போம்.''

''சரி.''

கையைப் பற்றிய அழுத்தத்தில் நெருக்கம் தெரிந்தது. கண்களில் பனி படர்கையில் 'இவனுக்கும் நமக்கும் என்ன உறவு?' என்று மனசு அதிசயித்தது.

ஜயசீலன் மற்றவர்களுடன் நடந்தான். முகாமின் விஸ்தீரணம் மிகப் பெரியதாக இருந்தது. மறுபடியும் பெயர் பதிவு செய்ய வேண்டும் என்றார்கள். ரேஷன் கார்டும் செலவுக்குப் பணமும் கொடுப்பார்களாம். 'இன்றைக்கு வந்தவர்களுக்கெல்லாம் சாப்பாடு உண்டு' என்றார்கள்.

தங்கள் தங்கள் கவலைகளில் சிக்கிக் கொண்ட முடிச்சுக்களாய் எல்லாரும் மற்றவருடன் ஒட்டாமல் நின்றார்கள். அவன் முறை வந்ததும் அவன் கையொப்பமிட்டு, லேசான பதற்றத்துடன்,

''இந்தமுகாம்லேஜோஸப்செல்வநாயகம் சீலியா செல்வநாயகம்னு இரண்டு பேர் இருக்கிறார்களா?'' என்று கேட்டான்.

அதிகாரி முகத்தை நிமிர்த்தாமல்,

''எந்தத் தேதியிலே வந்தாங்க?'' என்றார்.

''அது தெரியாது!''

''அப்ப எப்படிக் கண்டுபிடிக்கிறது? இந்த முகாம்லே ஒன்பதினாயிரம் பேர் இருக்காங்க.''

''அப்பக் கண்டுபிடிக்க முடியாதா?''

''நிதானமா பழைய ஃபைலைப் பார்க்கணும். ஒரு வாரமாகும் மத்தியானமா வந்து விவரம் கொடுத்துட்டுப் போ.''

அவன் மெல்லிய ஏமாற்றத்துடன் வெளியே வந்தான். இங்கு இத்தனை பெரிய முகாம் இருக்கும் என்று அவன் நினைத்திருக்கவில்லை. சீலியா இருந்தாலும் அவளைக் கண்டுபிடிப்பது அவ்வளவு லகுவாக இருக்காது. கஷ்டப்பட்டாலும் கடைசியில் கண்டுபிடிக்க முடிந்தால் சரி என்கிற சமாதானத்துடன் அவன் சாப்பிடப் போனான். பசி இருந்தாலும் சாப்பாடு உள்ளே இறங்கவில்லை. வரிசை வரிசையாகப் பிச்சைக்காரர்களைப் போல இலங்கைத் தமிழர்கள். பிச்சைக்காரர்களே அதிகமில்லாத இடத்திலிருந்து வந்தவர்கள். சுமாரான வசதியிலிருந்தவர்கள்தான் எல்லோருமே. யார் செய்த பாவத்துக்காக இங்குச் சிலுவையைச் சுமக்கிறார்கள்?

சாப்பாடு முடிந்து வெளியே வந்து செலவுப் பணத்தையும் ரேஷன் கார்டையும் க்யூவில் நின்று வாங்கி வெளி வருவதற்குள் மனசு அதிகமாகச் சோர்ந்தது.

நிறையச் சிறுவர்களும் சிறுமிகளும் சீருடை அணிந்து மதிய உணவிற்காகப் பள்ளியிலிருந்து திரும்பிக் கொண்டிருந்தார்கள்.

'இது ஒரு நல்ல காரியம்!' என்று அவன் தனக்குள் திருப்திப் பட்டுக் கொண்டான். உயிரைக் காப்பாற்றிக் கொண்டு ஓடி வந்தவர்களுக்கு அடைக்கலம் கொடுத்துத் தங்க வசதி செய்து பொடியர்களுடைய கல்விக்கும் ஏற்பாடு செய்திருப்பதற்கு இந்திய அரசுக்கு நன்றி சொல்லத்தான் வேண்டும்......

அவன் சட்டென்று உறைந்து நின்றான். சீருடையில் அதோ செல்லும் பொடியன் ஜோஸப் — சீலியாவின் தம்பி ஜோஸப்..

(தொடரு



# உயிர்த் தியாகம் செய்த திலீபன் குறித்து...?



* தியாகம் வீண் போகாது

* செந்தில்வாசன், திருமருகல்.

? 'உயிருடன் இருப்பவர்கள்பெயரைஎந்தக் கல்லூரி அல்லது கட்டடத்துக்கும் வைக்கக் கூடாது' என்று கூறி கருணாநிதியின் பெயரை அகற்றியவர்கள் தற்போது எம். ஜி. ஆர். பெயரை மருத்துவப் பல்கலைக் கழகத்துக்குச் சூட்டுகிறார்களே?

! 'எம். ஜி. ஆரின் உடல்நிலை தேறியது கண்டு மருத்துவ உலகமே அதிசயிக்கிறது' என்று அயல்தேச மருத்துவர்களே அறிக்கை விட்டதன் விளைவாக இருக்கலாம்!

* ஏ. பாலச்சந்திரன், கே. வி. குப்பம்.

? தமிழில் பேசுவது, எழுதுவது அனைத்தி லும் ஆங்கிலக் கலப்பு அதிகமாகி விட்டதே?

! யெஸ் ஸார், வாட் டு டு?

* வி. சாயா ரவி, சென்னை — 16.

? 'கங்கை காவிரியை இணைக்கப் பாடுபடு வேன்' என்று மூப்பனார் கூறியிருப்பது பற்றி...?

! முதலில் அவருடைய கட்சியில் உள்ள கோஷ்டிகளை இணைக்கப் பாடுபடட்டும். அதுவே கங்கை காவிரி இணைப்பு போன்று அத்தனை சிரமமான ஒன்றாகத் தோன்று கிறதே! அதில் வெற்றி பெற்ற பின் இதற்கு வரலாம்.

* அர. மணிவண்ணன், சென்னை — 16.

? 'தி. மு. க. வௌவால்கள் குடியிருக்கும் பாழ் மண்டபம்' என்று ஆர். எம். வீ. வர் ணிக்கிறாரே?

! 'அ. தி. மு. க. ஒரு சோம்பேறி மடம்' என்ற பதிலுக்கு வர்ணிக்க தி. மு. க. தலைவர், தொண்டர்களுக்கு எவ்வளவு நேரமாகும்?

* வி. துரைராஜ், சென்னை.

? ஆலயத்தை வெறுக்கும் தி. மு. க. வினர் அறிவாலயம் என்று பெயர் வைத்தது ஏன்?

! ஆலயம் என்ற சொல்லுக்குக் கோவில் என்ற பொருள் தவிர, வாழுமிடம், தங்கு மிடம் என்ற அர்த்தங்களும் உண்டு. அறிவு வாழும் இடம் என்ற அர்த்தத்தில் அறிவால யம் என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். (அறிவை வழிபடுவது என்பதும் ஹிந்துக்க ளுக்குச் சம்மதமே. தட்சிணாமூர்த்தி ஞானத் தின் வடிவம்.)

* இ. ஜம்புநாதன், பூவாளூர்.

? தமிழக இ. காங்கிரஸின் அடுத்த தலைவர் திண்டிவனமா? குமரியா?

! சாரல், குற்றாலம் பக்கமாக வீசுகிற தாய்த் தோன்றுகிறது.

* எம். ரமேஷ்குமார், போடிநாயக்கனூர்.

? ஒருநாட்டின் பிரதமர், 'போர் அபாயம்' பற்றி எப்பொழுதெல்லாம் சொல்லிக்



* தி. மு. க. வர்ணனை



* வரி பாக்கி

கொள்ளலாம்?

! தன் பதவிக்கு அபாயம் வரும் போதெல்லாம்!

*** ராஜேந்தர் பிரியன், திருச்சி.**

**? தீபாவளிக்குக் கதரா, ஸில்க்கா?**

! இங்கே கதர்; அங்கே ஸில்க்!

*** கே. ரமேஷ், சென்னை — 4.**

**? "நான் இப்போது சந்நியாசி. மாதம் எனக்கு ஒரு ரூபாய் சம்பளம். எனவே நான் வருமான வரி பாக்கி செலுத்தத் தேவையில்லை; செலுத்த மாட்டேன்" என்று என். டி. ஆர். கூறுகிறாரே?**

! வருமான வரி பாக்கி என்பது இன்று வாங்கும் சம்பளத்தின் அடிப்படையில் அல்ல. முன்பு ஏராளமாய்ச் சினிமாத் துறையில் சம்பாதித்ததில் வரி கட்டாமல் பாக்கி வைத்திருப்பதைத்தான் கேட்கிறார்கள். அதைச் செலுத்துவதுதான் முறை. வருமான வரி பாக்கி வைப்பவர்களுக்கு வோட்டுரிமை கிடையாது; தேர்தலில் நிற்க முடியாது என்று சட்டம் வரட்டும். எல்லா அரசியல்வாதிகளும் ஒழுங்காக வருமான வரி செலுத்துவார்கள்!

*** எம். சந்தன ஜோதி, நாகப்பட்டினம்.**

**? அண்ணா அறிவாலயம் கட்ட பாக்யராஜ் ரூ. 25,000 தந்தார் என்பது உண்மையா?**

! அது உண்மை என்று நிரூபணமாகிப் போன பழங்கதை. இப்போது, பாக்யராஜ் குங்குமத்தில் எழுதுவதன் மூலம் அவர் அந்தப் பத்திரிகையைப் பயன்படுத்திக் கொள்கிறாரா அல்லது அந்தப் பத்திரிகை அவரைப் பயன்படுத்திக் கொள்கிறதா என்பது பற்றித்தான் பெரிய சர்ச்சை!

*** பி. எம். பிரபாகரன், திருமங்கலம்.**

**? பெண்ணாசை, பொன்னாசை, மண்ணாசை — இந்த ஆசையில் அரசியல் ஆசையையும் சேர்த்துக் கொள்ளலாமா?**

! அரசியல் ஆசை என்பது நீங்கள் முதலில் குறிப்பிட்ட மூன்றையும் உள்ளடக்கியதாகி விட்டதே!

## நீங்கள் கேட்டவை — தராசு

*** கே. வி. நாதன், நெய்வேலி. ***

**? போராளிகளின் கோரிக்கைகளுக்காக உயிர்த் தியாகம் செய்த திலீபன் குறித்து?**

! போராட்டக் களத்தில் குண்டு துளைத்து மடிவது அல்லது கைதானால் சயனைட் மாத்திரையை விழுங்கிச் சாவது என்ற உறுதியை நிறைவேற்றுவது கூடக் கடினம் அல்ல. மரணம் சில நொடிகளில் சம்பவித்துவிடும். ஆனால் பசிக் கொடுமையை, அந்தச் சித்திரவதையை அணு அணுவாக நாட்கணக்கில் அனுபவித்துச் சாவது என்பதற்கு அசாத்திய மன உறுதி வேண்டும். திலீபனின் மரணம் தவிர்த்திருக்கக் கூடிய, தவிர்க்கப்பட்டிருக்கவேண்டியதொன்று.என்றாலும், அசாதாரண சாதனைகளுக்குத் தியாகங்கள் என்ற அடிக் கற்கள் தேவைப்படத்தான் செய்கின்றன. திலீபனின் தியாகம் வீண் போகாது: அமைதியும் ஜனநாயக நல்லாட்சியும் உருவாகும் என்பதற்கான நம்பிக்கைக் கிரணங்கள் ஏற்கெனவே ஒளி சிந்த ஆரம்பித்து விட்டன

*** டி. தாமரை பிரபு, குடியாத்தம்.**

**? முதலமைச்சரின் உடல்நிலை தற்போது எப்படி உள்ளது?**

! 'பரம சிவ'னுக்கே வெளிச்சம்!

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**கே. வி. நாதன்,**
**C — 46, பொன்னியார் சாலை,**
**வட்டம் — 25,**
**நெய்வேலி — 607 803.**

* பெரிய சர்ச்சை!



* க — கா இணைப்பு





ஆயிரம் தெய்வங்களை வேண்டிக் கொண்டு அலுவலகத்தில் என் இருக்கையில் வந்து அமர்ந்து, கவலையுடன், வேண்டா வெறுப்பாக ஃபைல்களைப் புரட்டினேன்.

யாரைப் பார்க்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டிருந்தேனோ அந்தப் பழிகாரப் பாவி சொல்லி வைத்தாற்போல் அடுத்த ஐந்தாவது நிமிடத்தில் அழைப்பில்லாமல் ஆஜரானான்.

“என்னடா சுந்தரம், இழவு வீட்டுக்குப் போய் வந்தது போல்....?” — அவன் முடிக்கு முன்னரே, “ஐயோ குரு, ஏற்கெனவே நொந்து போயிருக்கிறேன். அச்சான்யமாக வேறு எதுவும் தவறு செய்து பேசாதே. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்கிறேன்” என்றேன்.

“சுந்தரம், நீ என்னை அடித்தால் கூடப் பொறுத்துக் கொள்வேன். ஆனால், உன் கவலையின் காரணத்தைத் தெரிந்து கொள்ளாமல் இங்கிருந்து நகர மாட்டேன். இல்லாவிட்டால் என் மண்டையே வெடித்து விடும்.”

காலைச் சுற்றிய பாம்பு கடிக்காமல் போகாது என்பது எனக்கும் தெரியும், அவனுக்கும் தெரியும்.

வேறு வழியின்றிக் காலையில் நடந்த விஷயத்தை அப்படியே சொன்னேன்:

என் பத்து வயதுப் பெண் மைத்ரேயி கிணற்றடியில் சறுக்கி விழுந்து காலில் பலமாக அடிபட்டுக் கொண்டாள். இரண்டே நிமிடங்களில் வீக்கம் அதிகமாகி விடவே, என் மனைவி பயந்து போய், அழ ஆரம்பித்து விட்டாள்.

ஒரே ஓட்டமாய் ஓடி ரிக்ஷாவை அழைத்து வந்து குழந்தையைக் கைத்தாங்கலாகப் பிடித்து ஏற்றித் தெரு முனையில் உள்ள கிளினிக்கில் சேர்த்தேன்.

“மிஸ்டர் சுந்தரம், ஒன்றும் பயப்பட வேண்டாம். இன்னும் கொஞ்ச நேரத்தில் எக்ஸ்ரே எடுத்துப் பார்க்கிறேன். மாலை வாருங்கள் ரிசல்ட் சொல்கிறேன்” என்று டாக்டர் தைரியம் சொல்லி என்னை அலுவலகம் அனுப்பி வைத்தார்.

நான் சொன்னதைக் கேட்டதும் குரு கொஞ்சம் கூட அலட்டிக் கொள்ளாமல்

# புன்னகையின் பொருள்



சொன்ன பதில் இதுதான்:

"ஏய் முட்டாள்! இதற்காகவா இப்படிக் கவலைப்படுகிறாய்? எல்லாவற்றையும் உதறித் தள்ளிவிட்டுப் பேசாமல் வேலையைக் கவனி."

பாவிப் பயலுக்குத் துளிக்கூட ஈரமில்லாமல் தெய்வம் நெஞ்சைத் துடைத்து வைத்திருக்கிறதே. தனக்கு வந்தால்தான் துன்பமா? — என்று என் நெஞ்சம் குமுறியது.

இப்படி அநேக முறைகள் அவன் நடந்து கொண்டிருப்பதை நான் கண்டிருக்கிறேன்.

வயதான காலத்தில் தனக்கு உதவியாக இருப்பான் என்ற நம்பிக்கையில் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி, பணத்தைச் செலவழித்துப் படிக்க வைத்த தன் மகன் குறைந்த பட்சம் பள்ளி இறுதித் தேர்வில் முதல் பத்து மாணக்கர்களில் ஒருவனாகவாவது வருவான் என்று நம்பியிருந்த டெஸ்பாட்ச் தண்டபாணி, தன் மகன் பரீட்சையிலேயே தேறவில்லை என்று தெரிந்து கொண்ட போது, அடிபட்ட மரம் போல் பாரிச வாயுவில் விழுந்து விட்டார். தள்ளாடித் தள்ளாடி ஆபீசுக்கு வந்தபோது எங்களால் முடிந்தவரை நானும் மற்ற அலுவலக நண்பர்களும் ஆறுதல் சொன்னோம். ஆனால் குருமூர்த்தியோ,

"என்ன தண்டபாணி என்னவோ பெரிய விபத்தில் பையன் உயிர் போய் விட்ட மாதிரி வருத்தப்படறீங்க. இந்த வருஷம் உங்களுக்குக் காலேஜ் ஃபீஸ் மிச்சம்னு நினைச்சுக்குங்க. ஆமாம்... இப்ப படிச்ச கழுதைகள்ல, எல்லாக் கழுதைகளுமா வயசான காலத்திலே பெத்தவங்களைக் காப்பாத்தறாங்க. எப்போ பையனுக்குப் படிப்பிலே அக்கறையில்லையோ, இப்பவே வேலைக்குப் பட்டாளத்து வீரனைப் போலப் படை எடுக்கச் சொல்லுங்க..." என்றான்.

இன்னும் இரண்டு நிமிடங்கள் அவன் தொடர்ந்து பேசியிருந்தால், நானே அவனைக் கொலை செய்திருப்பேன்.

மாதக் கடைசியில் ஒருநாள் மணி பர்சை பஸ்ஸில் கோட்டை விட்டு வந்த லெட்ஜர் கிளார்க் சண்முக முதலியார், ஸ்டேட் பாங்க் ஃபைனல் இண்டர்வியூவில் ஏமாற்றமடைந்த டெலிபோன் ஆபரேட்டர் சாந்தி — யாரும் அவன் நக்கல் பேச்சிலிருந்து தப்பவில்லை. இன்று என் மடியிலும் கையை வைத்து விட்டான்.

அலுவலகம் முடிந்தவுடன் நைந்த உள்ளத்துடன் கிளினிக்குக்கு ஓடினேன்.

நல்லவேளை, தெய்வம் என் பக்கம் இருக்கவே குழந்தை மைத்ரேயிக்குப் பெரிய ஆபத்து ஒன்றும் ஏற்படவில்லை. வீக்கம் குறைவதற்கு மட்டும் இருபது ரூபாய்க்கு மாத்திரைகள்!

ரிக்ஷாவில் வீட்டுக்குத் திரும்பி வரும் போது, குழந்தை ஏதோ ஆவலாகச் சொல்ல விரும்பவே, அவள் முகத்தை நோக்கினேன்.

"அப்பா, நான் உங்களிடத்தில் சொல்லவே மறந்துட்டேம்ப்பா. நாளைக்குப் பள்ளிக்கூட ஆண்டு விழாப்பா. அதோட பெற்றோர் தினவிழாவும் நாளைக்கே நடக்கிறதுப்பா. பக்கத்து வீட்டு காயத்ரி, அப்புறம் ஆஷா, எதிர்வீட்டு ஜயந்தி இவங்க அப்பாவெல்லாம் காலையிலிருந்தே பள்ளிக்கூடத்தில் விழா ஏற்பாடுகளையெல்லாம் கவனிக்கணும்னு எங்க கரெஸ்பாண்டண்ட் பீட்டர் சார் சொல்லியிருக்கார். நீங்களும் நாளைக்கு வரலேன்னு எனக்கு ரொம்ப அவமானமா இருக்கும். இந்தச் சமயம் பார்த்து எனக்குக் கால் வீங்கிடுச்சி..."

சொல்லி முடிப்பதற்குள் பிஞ்சு மனம் பாகாய் உருகி அழுதுவிட்டது.

மனைவியிடம் மைத்ரேயியை ஒப்படைத்து விட்டு இரண்டு தெருக்கள் தள்ளி ஓர் ஒண்டுக் குடித்தனத்தில் குடியிருந்த குருமூர்த்தியின் வீட்டைத் தேடிக் கிளம்பினேன்— மறுதினத்துக்கு விடுப்பு விண்ணப்பம் கொடுக்க...

அப்பொழுதுதான் என் நினைவிற்கு வந்

தது. அவன் வீட்டு இலக்கத்தைக் கேட்காமல் போனது. அவன் பலமுறை அழைத்த போதும் ஒரு நாள் கூட நான் அவன் வீட்டிற்குச் சென்றதில்லை. எப்படியும் சில அடையாளங்களைச் சொல்லி, வீட்டைக் கண்டு பிடித்துவிடலாம் என்ற நம்பிக்கையில் இப்போது நடையைக் கட்டினேன்.

என் நம்பிக்கை வீணாகவில்லை. ஐந்தே நிமிடத்தில் விசாரித்து, வீட்டைக் கண்டு பிடித்து விட்டேன். கதவைத் தட்டியதும் 'க்ரீச்' என்ற ஒலியுடன் தகரக் கதவு திறந்து கொண்டது. நான் பேச ஆரம்பிப்பதற்கு முன்பே,

''ஏண்டா குரு, ஏன் எட்டு மணிக்கே திரும்பிட்டே? அரட்டைக்கு யாருமே கிடைக்கல்லியோ...?'' என்று வயதான ஒரு மூதாட்டி கண்களை இடுக்கிக் கொண்டு என்னைப் பார்க்க முயன்றாள்.

பாவம் இரண்டு கண்களிலுமே பார்வையை இழந்திருந்தாள்.

அந்த வயதான மூதாட்டிதான் குருமூர்த்தியின் தாயாக இருக்க வேண்டும்.

'ஐயோ பாவம்!' என்று அனுதாபப் பட்டுக் கொண்டே அறையின் இன்னொரு புறம் திரும்பிய நான் அங்கே எலும்பும் தோலுமாய்ப் பாரிச வாயுவில் முடங்கிக் கிடந்த கிழவரைக் கண்டேன்.

''தம்பி நீங்க யாரு? குருமூர்த்தியைப் பார்க்க வந்திருக்கிங்களா? இந்த 'மோடா'வில் உட்காருங்க'' என்று சொல்லிக் கொண்டே, ''அம்மாடி காயத்ரி, கொஞ்சம் இங்கே வாம்மா'' என்று உள்புறம் நோக்கி ஒரு குரல் கொடுத்தார்.

''ஒன்றும் இல்லை. குருமூர்த்தியின் ஆபீஸில் நான் ஒன்றாக வேலை பார்ப்பவன். நாளைக்கு எனக்கு லீவு வேண்டும். இந்த லீவ் அப்ளிகேஷனை அவனிடத்தில் சேர்த்து விட வேண்டும்'' — என்று நான் சொல்லிக் கொண்டிருந்த போதே, இருபது வயது இளநங்கை எங்கள் அருகில் வந்தாள். என்னை அறியாமல் அவளை ஏறிட்டு நோக்கிய நான், அடுத்த வினாடி அதிர்ந்து விட்டேன். பாவம், இருபது வயதிற்குள் மாங்கல்யத்தை இழந்து நிற்கும் இவளை, சமூகம் இன்னும் எவ்வளவு விபரீதமான சித்திரவதைக்கு உட்படுத்தப் போகிறதோ?

''வந்து... வந்து... அண்ணா இப்பொழுது வரும் நேரம்தான். அண்ணிக்கு நேற்று இரவு சற்று அதிகமாகிவிட்டது. தாம்பரம் சானடோரியம் டீ. பி. ஆஸ்பத்திரிக்குப் போயிருக்கிறார். கொஞ்ச நேரம் உட்கார முடிந்தால்...''

''நான் பிறகு வருகிறேன்...'' என்று சொல்லிக் கொண்டே அந்தக் கொடுமைகளை மீண்டும் சந்திப்பதற்குச் சக்தியின்றி நடைப் பிணமாக வெளியே வந்தேன்.

தெருமுனையில் எதிர்பாராத விதமாகக் குருமூர்த்தியைச் சந்தித்தேன்.

''எங்கேடா இப்படி இந்தப் பக்கம் காற்றடித்தது?'' என்றான் புன்னகையுடன்.

''உன் வீட்டுக்குத்தான் போய் வருகிறேன். உன் மனைவி டீ. பி. பேஷண்ட். உன் தாய் இரண்டு கண்களையும் இழந்தவள். உன் தந்தைக்குப் பாரிச வாயு. எல்லாவற்றையும் விட உன் தங்கை இளம் வயதிலேயே விதவைக் கோலம். கடவுள் எப்படிப் பட்ட மகத்தான சோதனைகளை உனக்குக் கொடுத்திருக்கிறார். இவ்வளவு கொடுமையான நிலையிலும், நீ சிரிப்பும் கேலியுமாக...'' என்றேன்.

''சிரிக்காமல் பின்னே அழச் சொல்கிறாயா? நானும் அழத் தொடங்கினால் என்ன ஆகும்? என் உள்ளமும் உடலும் பாதிக்கப் பட்டு, நானும் படுக்கையில் விழுந்து விட்டால், அப்புறம் என்னையே நம்பியிருக்கும் ஜீவன்களின் கதி என்ன ஆகும்? விதியை நொந்து அழுவதைவிட, விதியின் விளையாட்டை ஒரு சவாலாக எடுத்துக் கொண்டு, சிரித்துக் கொண்டே கடமையைச் செய்கிறேன். அவற்றை அதிகம் பாராட்டாமல் எளிமையாக எடுத்துக் கொள்ளும்படி, கிண்டலும் கேலியுமாகச் சொல்கிறேன். நீங்கள் எல்லோரும் என்னை இரக்கமில்லாத அரக்கன் என்று திட்டுவதும் எனக்குத் தெரியும். அதற்காக நான் கவலைப்படவில்லை'' என்று சொல்லிக் கொண்டே மீண்டும் புன்னகையை வீசினான்.

என்றும் காட்டி வந்த புன்னகையைத் தான் அவன் இன்றும் வெளிப்படுத்தினான். ஆனால் இந்தப் புன்னகையில் இன்று எனக்கு வேறு பொருளல்லவா புலப்பட்டது! நேற்று வரை 'அலட்சியம்' என்று கருதி வந்த நான், இன்று அதில் தெய்வ ஒளியைக் கண்டேன்.



''அந்த அரசியல்வாதியின் வீட்டிலே, கொள்ளை அடிக்கப் போனியே, என்ன கிடைச்சது?''

'''இப்படிக் கஷ்டப்பட்டு, கொள்ளை யடிக்கிறதை விட்டுட்டு, பேசாமல், எங்க கட்சியிலே வந்து சேர்ந்திடு'ங்கிற 'உபதேசம்'தான் கிடைச்சது!''

— ஆர். அப்துல் சலாம்.

## அடுத்த இதழ்

# கல்கி தீபாவளி சிறப்பிதழ்

சுபா எழுதிய

**கம்ப்யூட்டரும் கட்டை வண்டியும்**

— முழுநீள நாவல்



## சிவசங்கரி

எழுதும்

நெஞ்சை நெகிழச் செய்யும்
வித்தியாசத் தொடர்கதை:

# வேரில்லாத மரங்கள்

ஆரம்பம்



**மௌனச் சாட்சியங்கள்:**

பல குற்றவாளிகள் கண்டுபிடிக்கப்பட குற்றப் புலனாய்வு விஞ்ஞானம் எப்படி உதவுகிறது என்பதை எளிய நடையில் உண்மைக் கதைகளாகக் கூறுகிறார் இத்துறை வல்லுனர்.

அலசல்:

**தீபாவளி ரிலீஸ் திரைப்படங்கள்**

— கவர் ஸ்டோரி.

**அதிக பக்கங்கள் :: அதே விலை!**



# தோழமை

"கல்கத்தாவிலிருந்து கண்ணன் எழுதியிருக்கான்."

"என்னவாம்? வழக்கம்போல இந்த லீவுக்கும் வந்து டேரா அடிக்கப் போறாங்களா? போதுமடா சாமி; வருஷம் தப்பினாலும் அவங்க வர்றது தப்பாது. புருஷன், பெண்டாட்டி, பிள்ளைகள், பெண்ணுடன் வந்து ஊட்டி அடிக்க வேண்டியது. அடுத்த மாசம் நாம் செலவுக்குக் கடன் வாங்க வேண்டியது..." படபடவென்று பொரிந்து தள்ளினாள் விசாலம்.

அவளுடைய வேதனை அவளுக்குத்தான் தெரியும். அந்த அம்மா வந்து உட்கார்ந்து கொண்டு மாமியாரை விட மோசமாக வேலை வாங்குவாள். கூட மாட ஒத்தாசையாகச் சுண்டு விரலை அசைக்க வேண்டுமே. ஊஹூம். கேட்டால், 'கேஸ் டிரபிள்' என்று சொல்லிக் கொண்டு மார்புக்கு நேரே மேலும் கீழுமாகக் கையசைத்து அபிநயித்தும் காட்டுவாள். இரண்டு பிள்ளைகள், மூத்த பெண் ஒருத்தி. அதுகளும் அம்மா மாதிரிதான். எடுப்பது, உடைப்பது, கத்துவது, கலாட்டா பண்ணுவது... ஒரே அமர்க்களம்தான். அவரைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். தன் கணவருடன் பேச ஆரம்பித்தால் நாலு வருஷ லீவு தொடர்ந்து வந்தாலும் போதாது... ஊஹூம்...

"என்னங்க, பதிலே பேச மாட்டேங்கறீங்க? அவங்க இங்கே வந்து 'டேரா' போடப் போற சமாசாரம்தானே?"

"எப்பவோ, பத்துப் பதினைஞ்சு வருஷங்களுக்கு முன்னால், கண்ணன் தன் மனைவி, குழந்தைகளுடன் தொடர்ந்து நாலைந்து வருடங்கள் வந்தது என்னவோ வாஸ்தவம்தான். அதுக்காக ஒவ்வொரு வருஷமும் உன் வீட்டை விட்டா மெட்ராஸிலே வேறே வீடு வாசல் அவனுக்குக் கிடையாதுங்கிற மாதிரி பேசறியே." பிரணதார்த்தி மனைவியைக் கடிந்து கொண்டார்.

"பதினஞ்சு வருஷங்களுக்கு முன்னால் இல்லே, பத்து வருஷங்களுக்கு முன்னால்..."

"ஏதோ ஒன்று. அந்த நாளில் காலேஜ்ல படிக்கும்போது நானும் கண்ணனும் எவ்வளவு உயிருக்கு உயிராப் பழகினோம்னு உனக்கே நான் சொல்லியிருக்கேன். என் ஆபீஸ் டிரெயினிங்குக்காகக் கல்கத்தாவுக்கு அனுப்பிச்ச போது ஒரு மாசம் என்னை அவன் எப்படிக் கவனிச்சுண்டான்! உனக்காக பனாரஸ் பட்டுப் புடைவை, உன் பையனுக்கு பேண்ட், சட்டைத் துணி, பெண்ணுக்கு சல்வார் கம்மீஸ், எனக்கு சூட் துணின்னு எக்கச்சக்கமாக வாங்கிக் கொடுத்தானே. அப்போ வாயெல்லாம் பல்லாச்சே உனக்கு. மறந்துட்டியா?"

"சரி, சரி. இப்ப என்ன அதுக்கு? என்ன விஷயமாம் கடிதாசிலே?"

"அவங்க லீவுக்கெல்லாம் ஒண்ணும் வரல்லே. அவனோட ஒரே பெண் வசந்திக்குப் பிள்ளை பார்க்கிறானாம். நம்ம பையன் ஹரிகரனோட ஜாதகத்தை அனுப்பேன்னு கேட்டிருக்கான்."

விசாலம் உடனே நெகிழ்ந்து போனாள். "ஏங்க, அப்படியா எழுதியிருக்காங்க? ஒரே பெண்ணாச்சே, நிறையச் செய்வாங்க. பூர்வீகச் சொத்து நிறைய இருக்குன்னு அந்த அம்மா சொல்லியிருக்காங்க. வருஷா வருஷம் டேரா போட்ட விசுவாசத்தை மறக்காமல் ஜாதகம் கேட்டு எழுதியிருக்காரே!"

பிரணதார்த்தி மௌனமாக எழுந்து போனதைக் கண்ட விசாலம், "என்னங்க, எப்ப ஹரி ஜாதகத்தை அனுப்பப் போறீங்க?" என்று கேட்டாள்.

"உடனே கடிதாசு எழுதணும் விசாலம். இப்போதைக்கு என் பையனுக்குக் கல்யாணம் பண்ணறதாக இல்லே; வேறே பையன் ஜாதகம் கிடைச்சால் அனுப்பறேன்னு எழுதணும்..."

"ஏங்க, உங்களுக்கு என்ன பைத்தியம் பிடிச்சிருக்கா?"

"பைத்தியம் இல்லே விசாலம். தோழமை. ஏதோ நாலைஞ்சு வருஷங்கள் டேரா போட்ட நன்றிக்காகவா ஜாதகம் கேட்டிருக்கான்னு நினைக்கறே? தோழமைக்கு அவன் காட்டற மரியாதை அது. உன் பிள்ளை மூன்று வருஷ பி. காம். படிப்பை ஆறு வருஷமாப் படிச்சுண்டிருக்கான். இவனுக்குக் கல்யாணம் பண்ணிக்க என்ன யோக்கியதை இருக்கு? பொறுப்பில்லாமல் படிக்கிற இவன், இதே மாதிரிதானே பொறுப்பில்லாமல் குடும்பம் நடத்துவான்? சரி, உன் ஆசைப்படியே ஜாதகம் அனுப்பறோம்னு வைச்சுக்கோ. உன் பிள்ளையின் யோக்கியதை தெரிஞ்சா ஜாதகம் பொருந்தலேன்னு சுலபமா எழுதிடுவாங்க. தேவைதானா? இந்த நட்பின் மரியாதையை இப்படியே காப்பாத்திப்போமே, என்ன சொல்றே?".

விசாலத்தின் முகவாய்க் கட்டையும், தோள் பட்டையும் வெகு நேரத்துக்கு வலித்துக் கொண்டிருந்தன!

— பிரபுசங்கர்

''எங்க புது சினிமாவில் வில்லன் கதா நாயகனைப் புது மாதிரியா கொல்றான்!''

''எப்படி?''

''டீ. வி. டிராமா காட்டி!''

— ராதா வாசுதேவன்





''ஜனங்களுக்கு, 'விழிப்புணர்ச்சி' வந்திருக்கன்னு சொல்றீங்களே, எப்படி?''

''இரவு ரெண்டு மணி வரைக்கும், 'டீ.வி.'யிலே 'அடல்ட்ஸ் ஒன்லி' படம் பார்க்க ஆரம்பிச்சுட்டாங்களே!''

— ஆர். அப்துல் சலாம்.

''சட்டைல 'மை' கொட்டிடுத்தே!''

''பரவாயில்லே, இது என்னன்னு யாராவது கேட்டா, 'டீஷர்ட்'ன்னு சொல்லிடறேன்!''

— ராதா வாசுதேவன்



''இந்தப் பாடகர் இரண்டு தம்பூரா ஸ்ருதி வைத்துக் கொள்கிறாரே, ஏன்?''

''இதென்னய்யா கேள்வி? ஒண்ணிலே ஸ்ருதி சேரவில்லையானால் இன்னொண்ணிலாவது சேரட்டுமே என்ற எண்ணத்தில்தான்!''

— டி. ஏ. கிருஷ்ணமூர்த்தி.

பண்புப் பயிற்சி

புட்டபர்த்தி பிரசாந்தி நிலையத்தின் அருகே பத்திரிகை நிருபர் ஒருவர் தம் சட்டைப் பையிலிருந்து சிகரெட் ஒன்றினை எடுத்ததைப் பார்த்த மாணவர், இருகை கூப்பி, ''ஸாயிராம்! ஐயா! தயவு செய்து இங்கு புகைபிடிக்காதீர்கள்'' என்று கேட்டுக் கொண்டார். நிருபர் வெகுண்டு ''புகைத்தால் நீ என்ன செய்து விடுவாய்?'' என்றார்.

மாணவர், ''என்னால் ஒன்றும் செய்துவிட முடியாது. தாங்களாகவே இசைந்து புகைக்காத வரை மீண்டும் மீண்டும் தங்களிடம் வேண்டிக் கொண்டே இருப்பேன்'' என்றார்.

நிருபர், ஸாயி கல்லூரி மாணவர்களுக்கு அளிக்கப்பட்டுவரும் உயர்ந்த பண்புப் பயிற்சியைக் கண்டு வியந்து, சிகரெட்டை பாக்கெட்டில் திரும்பப் போட்டுக் கொண்டார்.

— டி. ஏ. கிருஷ்ணமூர்த்தி.

ஆதாரம்: ''டிவைன் க்ளோரி''
வி. பாலு எழுதிய ஆங்கில நூல்





# ஓர் வேண்டுகோள்

சுமார் 325 ஆதரவற்ற குழந்தைகளுக்கு இலவச உணவு, உடை, இருக்க இருப்பிடம், கல்வி அளித்து வரும் சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் ஆண்டுதோறும் தீபாவளி அன்று குழந்தைகளுக்குப் புத்தாடை, பட்டாசுகள், இனிப்புகள் வழங்கி தீபாவளியைச் சிறப்பாகக் கொண்டாடப் பொது மக்கள் பண உதவியோ அல்லது பொருளுதவியோ கொடுத்து 'உதவும்படி கேட்டுக் கொள்கிறோம்.

தாங்கள் ஆதரவற்ற குழந்தைகளுக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களை ஒரு புதிய பாதையில் கொண்டு செல்லும் ஆசிரமத்தின் அரியதொரு செயலையும், திக்கற்ற முதியோர்களுக்கு அடைக்கலம் கொடுத்து வருவதையும் அறிந்திருப்பீர்கள் என்று நினைக்கிறோம். எனவே இது சம்பந்தமாகத் தாங்கள் அளிக்கும் உதவி ஆதரவற்ற குழந்தைகளுக்கும், ஆசிரமத்தில் இருக்கும் முதியோர் இல்லத்தின் ஆதரவற்ற முதியோர்களும், இல்லக் குழந்தைகளும் மன மகிழ்ச்சி[illegible]ன் தீபாவளித் திரு நாளைக் கொண்டாட அவர்களுக்குப் புத்தாடைகள், பட்டா, இனிப்புகள் வழங்க ஏதுவாக இருக்கும் என்று தெரிவித்துக் கொள்கிறோம்.

பொது மக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். பொது மக்கள் தங்களால் இயன்ற உதவியைப் பணம் அல்லது பொருட்களாக,

நிர்வாகி, 'சிவானந்த சேவாஸ்ரமம்,'' நெ 20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம், சென்னை — 600 059, என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

**ராஜாஜி வாழ்க்கை வரலாறு — IV**
**ராஜ்மோகன் காந்தி**

# பட்டேல்–நேரு பிளவு அதிகரிக்கிறது!



* கே. பி. எஸ். மேனன்

## 10

**போ**ர்ச்சுக்கீசிய ஆட்சியில் இருந்து வந்த கோவா, ஒரு சமயம் விவாதத்துக்கு வந்தது. அயல்நாட்டு விவகாரங்கள் கமிட்டி, கட்டுப்பாடுகளை விதிக்கலாமா என்று யோசித்தது. கோவானியர்கள் இந்தியாவுக்கு வருவது, திரும்பச் செல்வது, அவர்கள் இங்கு வேலை செய்வது, கோவாவுக்குப் பணம் அனுப்புவது ஆகியவற்றுக்குத் தடை விதிக்க வேண்டும் என்று ஒரு கருத்து நிலவியது. அச்சமயம் கமிட்டி கூட்டத்தில் கலந்து கொண்ட உயர் அதிகாரி கே. பி. எஸ். மேனன், ராஜாஜி இந்த யோசனைகளை எதிர்த்தார் என்று குறிப்பிடுகிறார். "கோவானியர்கள் நமது சகோதரர்கள்" என்றார் ஸி. ஆர். "அவர்களுக்குத் துன்பம் தருவது நம்மை நாமே துன்பத்துக்கு உள்ளாக்கிக் கொள்வது போல் அர்த்தமற்றதாகும்."

அப்போது பட்டேல் கேட்டார்: "நாம் ஏன் உள்ளே நுழையக் கூடாது? இரண்டு மணி நேர வேலைதானே? கோவாவைக் கைப்பற்றி விடலாமே?" என்றார்.

இந்த யோசனையை நேரு பலமாக ஆட்சேபித்தார். "அது ஆக்கிரமிப்புக்கு ஒப்பானது. இந்தியாவின் சாத்துவிகக் கொள்கைக்கு முரணானது. நமது நற்பெயர் களங்கப்பட்டுப் போகும்" என்றார்.

ஸி. ஆர். நேருவை ஆதரித்தார். யோசனை கைவிடப்பட்டது — அப்போதைக்கு.

ஆனால் அக்டோபர் இறுதியில் திபேத்தை பீக்கிங் தாக்கிய போது ஸி. ஆரும் பட்டேலும் ஒரு பக்கமும் நேரு மறுபக்கமும் இருந்தனர்! நேரு, சீனாவின் படையெடுப்பை "வருந்தத் தக்கது" என்று வர்ணித்தார். ஆனால், செஞ்சீன அரசுக்கு எதிரான அமெரிக்க நடவடிக்கைகளுக்கு அஞ்சி, அது காரணம் பற்றியே பீக்கிங் படையெடுப்பு நடத்தியதாகச் சொன்னார்.

இதற்கு மாறுபாடாகப் பட்டேல், சீன ஆக்கிரமிப்பை நேரடியாக, ஐயம் திரிபுக்கு இடமின்றிக் கண்டித்தார். இதுபற்றி ஸி. ஆர். வெளிப்படையாக அறிக்கை ஏதும் விடவில்லை. ஆனால் அமைச்சரவைக் கூட்டங்களிலும் மற்ற கமிட்டி கூட்டங்களிலும் அவர், இந்தியா இன்னும் அதிகமாக கண்டிப்புக் காட்ட வேண்டும் என்றே சிபாரிசு செய்தார்.

"அப்போது அமைச்சரவையில் இருந்த ராஜாஜி, நேருவின் திபெத் கொள்கையை எதிர்த்தார்" என்று நினைவுகூர்கிறார் காட்கில். காட்கிலும் இந்தக் கால கட்டத்தில் அமைச்சரவையில் இருந்தார். "திபெத் பற்றிப் பேச வேண்டும் என்று சொல்லி என்னை அழைத்து வரச் செய்தார் ஸி. ஆர்." என்று கே. பி. எஸ். மேனன் எழுதுகிறார். "சீன ஆக்கிரமிப்புக் குறித்து ஸி. ஆர். ரொம்பக் கோபம் அடைந்திருந்தார். திபெத் மீது சீனாவுக்கு மேலாதிக்க உரிமை இருப்பதாக நாம் ஒப்புக் கொள்ளவே கூடாது என்று ஆணித்தரமாக வாதாடினார்."

இந்த விஷயம் பற்றி நேருவுக்கு ஸி. ஆர். எழுதிய ஒரு கடிதம் ஒளிவு மறைவின்றி அப்பட்டமாகப் பேசுகிறது:

"இந்தியா, சீனாவைச் சுற்றி வரும் ஒரு கிரகமாக மாறி விடாமல் அதனைக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும். பணிக்கர் (பீக்கிங்கில் இந்தியத் தூதராக இருந்தவர்) மிகுந்த திருப்தியுடன் சீனா நம்மிடம் மிகவும் நேசப்பான்மையுடன் இருப்பதாகவும் அதற்கு நாடு பிடிக்கும் ஆசை ஏதுமில்லை என்பதாகவும் நம்மிடம் கூறும்போதெல்லாம் எனக்கு மிகவும் வேதனையாக இருக்கிறது. நமக்கு ஆதரவாளர்கள் யாரும் இப்போது தேவையில்லையே!" (1.12.50).

"நமக்கு ஏதேதோ காரியங்கள் இருந்தன. அதனால் திபெத்தைக் கவனிக்காமல் விட்டு


* பணிக்கர்

விட்டோம்'' — இது சில ஆண்டுகளுக்குப் பிறகு நேருவின் வார்த்தைகள்!

**விளக்க உரை எதற்கு?**

**நே**ரு — வி. ஆர். உறவு முறை எப்படி இருந்தது என்பதை பி. என். சக்கரவர்த்தி எழுதியுள்ள ஒரு சம்பவம் நமக்கு விளக்குகிறது. ஓர் அதிகாரி என்ற முறையில், அயல் விவகாரங்கள் கமிட்டி கூட்டங்களில் பங்கெடுத்துக் கொண்ட இவர், எழுதுகிறார்:

''பிரதம மந்திரி நேரு, ஒரு விஷயத்தைப் பிரஸ்தாபித்து விளக்குமாறு எனக்குக் கட்டளையிட்டிருந்தார். இந்தப் பணியை நான் நிறைவேற்றிய பின்னர், இலாக்காவின் சிபாரிசுகள் பற்றித் தமக்கு உள்ள சந்தேகங்களை நேரு வெளியிட்டு, மற்ற அங்கத்தினர்களின் கருத்துக்களைக் கேட்டார். அங்கத்தினர்களில் இருவர், நேருவின் சந்தேகங்களை ஆமோதித்து இலாக்கா சிபாரிசுகளை நிராகரிக்க வேண்டும் என்றனர். ஆனால் ராஜாஜி, இலாக்காவின் சிபாரிசுகள் அப்படியே ஏற்கப்பட வேண்டும் என்றார். அதற்கான காரணங்களையும் ராஜாஜி, தமது சகாக்களுக்கு, என்னை விடத் திறமையாக மீண்டும் ஒருமுறை விளக்கிச் சொன்னார். இதைக் கேட்டுக் கொண்ட பிறகும் பிரதம மந்திரி, ''பாருங்கள் ராஜாஜி, மெஜாரிட்டி உறுப்பினர்கள் என் பக்கம்தான் இருக்கிறார்கள்'' என்றார். ராஜாஜி, புன்னகையுடன், ''ஆமாம் ஜவாஹர்லால், மெஜாரிட்டி உங்கள் பக்கம்தான்; ஆனால் தர்க்க நியாயம் என் பக்கம்'' என்றார்! பிரதம மந்திரி சிரித்துக் கொண்டே, பெரும்பான்மை ஆதரவு தமக்கு இருந்த போதிலும் ராஜாஜியின் கருத்துக்களையே ஏற்றார்.''

**வி.** ஆர். டில்லிக்கு வந்து சேர்வதற்குச் சற்று முன்பாகத்தான் தென் கொரியா மீது வட கொரியா படையெடுத்திருந்தது. அப்போது ஒரு நீண்ட நேர அமைச்சரவைக் கூட்டத்துக்குப் பிறகு, தென் கொரியாவுக்கு ராணுவ உதவி அளிக்கப்பட வேண்டும் என்ற ஐ. நா. சபைத் தீர்மானத்தை இந்தியா ஆதரிக்க வேண்டும் என்று தீர்மானித்திருந்தார், நேரு. இந்த நிலைக்கு வி. ஆர். தமது முழு ஆதரவைத் தந்தார். மேலும் தென் கொரியாவுக்கு ஒரு மருத்துவப் படையை இந்தியா அனுப்ப வேண்டும் என்று முடிவெடுக்கப்படவும் வி. ஆர். காரண கர்த்தர்களில் ஒருவராய் விளங்கினார்.

**இ**லாக்கா இல்லாத ஒரு மந்திரியிடம் ஃபைல்கள் குவிவதில்லை. எனவே வி. ஆர். எப்போதும் மேஜைக்கெதிரே ஆணி அடித்தாற் போல் அமர்ந்திருக்க அவசியம் ஏற்படவில்லை. காமன்வெல்த் கிரிக்கெட் அணிக்கும் இந்திய அணிக்கும் இடையில் நடந்த டெஸ்ட் மாட்ச் பார்த்தார். டில்லிக்கு வந்த லியாகத் அலிகானிடம் காஷ்மீர் விவகாரம் பற்றிப் பலன் தராத பேச்சு வார்த்தைகளை நடத்தினார். அவருடைய மகாபாரதத்தின் ஆங்கில மொழி பெயர்ப்பு பிரசுரமாயிற்று. மூன்று கீதைப் பேருரைகள் நிகழ்த்தினார். அதன் முடிவில் அவர் சொன்னார்: ''கீதை ஒரு ரயில்வே கைட் மாதிரி. அதன் உதவியுடன் நாம் வாழ்க்கைப் பயணம் நடத்த வேண்டும். அதை மனப்பாடம் செய்ய அவசியமில்லை!''

அவருக்கு முன்பின் அறிமுகமில்லாதவர்கள் கூட அவரிடம் தங்கள் சொந்தப் பிரச்னைகள் பற்றியும் அறிவுரை கேட்டுக் கடிதம் எழுதுவார்கள். இவற்றுக்குப் பதில் போடவும் நேரம் ஒதுக்கிக் கொள்வார். ஆனால் அவருடைய பிரதான பணி நேரு — பட்டேல் உறவை உடைபடாமல் காப்பாற்றித் தருவதாகவே இருந்தது. இந்த உறவுக்கு இப்போது சோதனைகள் நிறையவே ஏற்பட்டிருந்தன!

நாமகிரி நினைவு கூர்கிறார்: ''தொய்ந்து போன நீண்ட முகத்துடன் நேரு வீட்டுக்கு வருவார். காப்பி கொண்டு வந்து கொடுப்பேன். இருவரும் நீண்ட நேரம் தனித்துப் பேசிக் கொண்டே இருப்பார்கள்.''

அவர்கள் அடிக்கடி பேசிய விஷயம் வல்லபாயின் போக்கு பற்றித்தான்! பட்டேல் உடல் நலிவுற்றிருந்தார். அவரைக் காண வி. ஆர். சென்ற போதெல்லாம் பட்டேல், ஜவாஹர்லால் பற்றிக் குறை கூறிப் பேசுவார். இந்தக் காலகட்டத்தில் பட்டேலின் காரியதரிசியாக இருந்தவர் வி. சங்கர். பின்னால் பட்டேலின் சரிதத்தையும் அவர் எழுதியிருக்கிறார். சங்கர் கூறுகிறார்: ''நேருவும் பட்டேலும் அடிக்கடி வி. ஆரைத் தூதராகக் கொண்டே ஒருவரோடு ஒருவர் கருத்துப் பரிமாற்றம் செய்து கொண்டார்கள்!''

இத்தகைய ஒரு சூழ்நிலையில், புதிய காங்கிரஸ் தலைவர் தேர்வானது, நேரு — பட்டேலிடையே பிளவை மேலும் ஆழப்படுத்தி, கிட்டத்தட்ட நேரு ஆட்சி — கட்சி இரண்டையும் விட்டு விலகிக் கொள்ளும் நிலைக்குக் கொண்டு போய் விட்டுவிட்டது!

(தொடரும்)

# ஒளிமயமான தீபாவளி
# திருநாளை கொண்டாட



புத்தம் புதிய
கண்ணுக்கினிய வண்ணங்கள்
மனதைக்கவரும் டிசைன்கள்
கருத்துக்கேற்ற மூல்சந்தின்
ஆடையுலகில் ஓர் புதிய படைப்பு.



சாரீஸ்,
மேட்சிங் பிலவுஸ்பிட்டு,
சர்ட் மற்றும்
பாண்ட் பிட்ஸ்,
சபாரி & சூட்கள்

இன்றே வாங்கி மகிழ
உங்கள் வருகை
தொடரட்டும்
வாங்குவது பெருகட்டும்




Chari

## மூல்சந்த் அசோசியேட்ஸ்

கஸ்தூரி காம்ப்ளெக்ஸ் 162, கோவிந்தப்ப நாய்க்கன் தெரு சென்னை-600 001

# தீர்த்தக்கரையினிலே...!



வேலையில்லாத ஓர் இளைஞன் தற்கொலை செய்து கொள்ள முயல அவன் உயரமான கட்டடத்திலிருந்து, விரித்துப் பிடித்த வலையில் குதித்து மயங்கி ஆஸ்பத்திரியில் அட்மிட் ஆக, அந்த இளைஞனுக்கு அங்கே அடிக்கிறது யோகம்.

சாகக் கிடக்கும் இளைஞன் ஒருவன் தன் கிராமத்திற்குப் போய், தன் தாய்க்கு மகனாக நடிக்குமாறு வேலையில்லா இளைஞனை வேண்டிக் கொள்ள — வேலையில்லாத இளைஞனுக்கு ஒரு தாய்க்கு மகனாக நடிக்கும் வேலை கிடைக்கிறது. ஒரு காதலி கிடைக்கிறாள். இரண்டு வில்லன்கள் கிடைக்கிறார்கள்.

கார்த்திமதி அம்மா. சாகக் கிடக்கும் இளைஞன் வசந்த். காதலி ரூபிணி. வில்லன்கள் வினுச்சக்கரவர்த்தியும், டிலெஷியா வாசுதேவனும். வேலையில்லா இளைஞன் மோகன்.

கதையைச் செமர்த்தியாகத்தான் பின்னியிருக்கிறார்கள். கூடவே சில அபத்தங்களையும் சேர்த்துப் பின்னி விட்டார்கள் என்பது ஒரு குறைதான்.

மாப்பிள்ளைகள் இருவருடைய பெண்களும் கல்லூரிக்குப் போய் மூன்று வருடப் படிப்பை முடித்துவிட்டு வருகிற வரை இப்பவோ அப்பவோ என்று சாகக் கிடந்த இளைஞன் சாகாமலே இருப்பது சினிமாவிற்கு மட்டுமே ஒத்து வரும் லாஜிக்.

ரூபிணி ஓப்ரோயின். நல்லவேளை ரூபிணியை மோகன் தூக்குகிறாற் போல் காட்சி எதுவும் இல்லை. தூக்கியிருந்தால் மோகனின் ஒன்றிரண்டு எலும்புகள் 'கட்டக்' ஆகியிருக்கும்.

மோகன், கொடுத்த வேலையை ஓர் அடி இந்தப் பக்கம் அந்தப் பக்கம் நகராமல் இருந்து செய்திருக்கிறார்.

ஒளிப்பதிவு சபாபதி. தான் படம்பிடிப்பது ஓர் ஆர்ட் ஃபிலிம் என்று நினைத்துவிட்டாரோ என்னவோ? கன்னங்கரேல் என்றிருக்கும் அத்தனை பாத்திரங்களையும் க்ளோஸ் — அப்பில் காட்டி பயமுறுத்துகிறார். காந்திமதி செயின் போட்டுப் போட்டு, கழுத்தில் ஏற்பட்ட வடு கூடத் தெரிகிறது என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்.

வெண்ணிற ஆடை மூர்த்தி எரிச்சலூட்டுகிறார்.

ஜனகராஜ் சிரிப்பு மூட்டுகிறார். தமக்கென்று ஒரு வசனம்பேசும்பாணியை அமைத்துக் கொண்டிருக்கிறார். ரசிக்கும்படியான பாணி. அதனால் ஜமாய்க்கிறார்.

கடைசியில் கிராம மக்கள் எல்லாம் கல்லெறிய, மோகன் — ரூபிணியுடன் காந்திமதியும் வந்து சேர்ந்துகொள்ள, டடால் என்று விளக்கைப் போட்டுப் 'போய் வா' என்று சொல்லிவிடுகிறார்களா; அதுதான் படத்தை அம்போ என்று விட்டு விட்டுப் போய்விட்ட மாதிரி இருக்கிறது.

— ஜெயமன்மதன்

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034
போன்: 473389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-, விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத்தபால் ரூ. 340/-.

# அறிமுகம்
# குளியலுக்குப் பின்
# சொகுசான முடிவு.




அறிமுகம் அல்டா எக்ஸ் லக்ஸரி
டவல்ஸ். கண்கவரும் வண்ண
கைகளிலே.

ஜப்பானிய தொழில்நுட்பத்தின் உன்னத
யாரிப்பு. உலகின் மிக நேர்த்தியான
வல்களுக்கு இணையானவை.

அதிமென்மை. அதிக உறிஞ்சும் திறன்.
திக அடர்த்தியான டவல் குஞ்சங்கள்.

100% சுத்தமான பருத்தியிழை

ஒற்றையாகவோ, ஜோடியாகவோ
கிடைக்கும் டவல்கள். விசேஷமான
சொகுசுமிக்க பெரிய சைஸில் கூட.

அடுத்த குளியலின் போது உங்களுக்கு
டவல் தருவது பாம்பே டையிங் ஆக
இருக்கட்டும்.

**பாம்பே டையிங்** 

ஸ்தாபிதம் 1879